Ūḻiyaṉ
Malar 18, itaḻ 9
September 01, 1938

Record no. 148

REG. NO. M. 3888 16 பக்கங்கள் [illegible]

சந்தா விகிதம்
உள்நாடு வருடச் சந்தா .... 5—0—0
பர்மா வருடச் சந்தா .... 6—0—0
வெளிநாடு வருடச் சந்தா .... 7—0—0

# ஊழியன்

விளம்பர விகிதம்
[illegible] 1-க்கு வாரம் 1-க்கு 0—8—0
[illegible]

(தேசிய வாரப் பத்திரிகை)
வியாழன் தோறும் வெளிவருவது

மலர் 18 | காரைக்குடி, வெகுதானியஸ்ரீ ஆவணிமீ 16உ. வியாழன் (1—9—1938) | இதழ் 9

## ஆடாமோ ஊசல்!

(ராய. சொ.)

தேர்ந்த அறந்தாங்கு செய்ய தமிழ்ப்பாவால்;
சாந்த குணம்படைத்தோன்! சபர்மதிவாழ் எம்மான்!
வேந்தர் விறற்படையும் வெறுங்கை கொடுவீழ்த்தும்
காந்தி கழல்பாடி ஆடாமோ ஊசல்!
கருணைக் கழல்பாடி ஆடாமோ ஊசல்!

பாரு பொருவுநறும் பசிய தமிழ்ப்பாவால்;
மாகந் தனைப்போர்த்த மாண்குணத்துக் காந்தி!
போகந் துறந்தபெரும் புனிதன்! புகழாளன்,
ஏகன் எழில்பாடி ஆடாமோ ஊசல்!
எங்கோன் எழில்பாடி ஆடாமோ ஊசல்!

கற்றைப் புகழ்சேர்ந்த கனிந்த தமிழ்ப்பாவால்;
இற்றைப் படியைநனி ஈடேற்ற வந்த
செற்றந் தவிர்ந்ததிருச் சீராளன் காந்தி!
ஒற்றைக் கதர்பாடி ஆடாமோ ஊசல்!
ஒண்மைக் கதர்பாடி ஆடாமோ ஊசல்!

கொள்ளை நலமார்ந்த கொஞ்சு தமிழ்ப்பாவால்;
அள்ளி உயர்அறத்தை அவனி நனிவாழக்
கிள்ளைக் கனிமொழியில் கிளத்தும் அருங்காந்தி!
வள்ளல் வளம்பாடி ஆடாமோ ஊசல்!
மன்னன் வளம்பாடி ஆடாமோ ஊசல்!

திரட்டி வடித்தசுவைச் சிறந்த தமிழ்ப்பாவால்;
மருட்டு புலன்வென்ற மாகாந்தி! மண்ணிற்
புரட்டும் உருட்டுமறப் புக்கொழிய ஆழி
உருட்டும் கரம்பாடி ஆடாமோ ஊசல்!
உதவுங் கரம்பாடி ஆடாமோ ஊசல்!

அருமை அழகிளமை ஆனநலன் யாவும்
பெருகும் இனித்தசுவைப் பெரிய தமிழ்ப்பாவால்;
உரிமை தனைப்பெறவே உழைக்கும் உயர்காந்திப்
பெரியோன் பெயர்பாடி ஆடாமோ ஊசல்!
பெம்மான் பெயர்பாடி ஆடாமோ ஊசல்!

மருவு கொழுநறெழில் மழைக்கை வளைக்கையால்
ஒருவா வகைபிடித்தே ஒப்பில் தமிழ்ப்பாவால்;
பொருவார் புவியிலாப் புனிதன் அருங்காந்தி!
ஒருவன் திறம்பாடி ஆடாமோ ஊசல்!
உண்மைத் திறம்பாடி ஆடாமோ ஊசல்!

சினவேல் விழியாடத் திகழ்முத்தம் சிந்தக்
கனிவாய் அமிழ்தொழுகக் கன்னித் தமிழ்ப்பாவால்;
இனிய மொழிபகரும் எந்தைசீர் ஏய்ந்த
அணியார் அறம்பாடி ஆடாமோ ஊசல்!
ஐயன் அறம்பாடி ஆடாமோ ஊசல்!

எம்மை உலகத்தும் ஈடில் தமிழ்ப்பாவால்;
நம்மை உயர்த்துதற்கு நானிலத்தில் நண்ணினோன்;
அம்மை அரசுபெற அருளு பெருங்காந்தி!
செம்மைச் செயல்பாடி ஆடாமோ ஊசல்!
திண்மைச் செயல்பாடி ஆடாமோ ஊசல்!

ஆடாமோ ஊசல்! அருமைசெறி தமிழ்ப்பாப்
பாடாமோ! பாடிப் பரவாமோ! பண்பிற்
கூடாமோ! கூடிக் கூர்ஜரனைக் கூறி
ஆடாமோ! பாடி ஆடாமோ ஊசல்!
அந்தணன்சீர் பாடி ஆடாமோ ஊசல்!

சிறு கதை

## சாஸ்திரியாரின் குறுக்கு வழி

'அன்பு'

பிரம பட்டினத்தில் பரமசிவ சாஸ்திரியார் எனும் தருக்க சாஸ்திரி இருந்தார். ஜனங்களின் சுகத்தையும் சௌக்கியத்தையும் கருதியே சாஸ்திரங்கள் வரையப்பட்டதென்றும், அவைகளை நாடி செய்யப்படும் காரியமெல்லாம் சாஸ்திர சம்மதமென்றும் அவரது கொள்கை. இந்தக் கொள்கையை ஆமோதித்து வைதீக பிராமணர்களில் அநேகர் அவரது சிஷ்யராயினர். பஞ்சக் கச்சமும், கட்டுக் கட்டாக விபூதியும் ருத்திராக்ஷ மாலையும் அணிந்து ஆசார சீலர்கள்போலவும், சத்தியசீலர்கள் போலவும் அவர்கள் வெளிக்குக் காட்சி அளித்தனரெனினும், எந்த வித்திலும் பணத்தைத் தேடுவதே அவர்களின் முக்கிய நோக்கம்.

கரடிபட்டியில் கள்ளர் சமூகத்தாரின் மகா நாடு கூடியது. அதற்குக் கள்ளர் தலைவர் கருப்பையாத் தேவர் அக்கிராசனாதிபதியாகவும், பரமசிவ சாஸ்திரியார் சொற்பொழிவாளராகவும் தெரிந்தெடுக்கப்பட்டார்கள். பரமசிவ சாஸ்திரியாருக்கும் அவரது சிஷ்ய கணங்களுக்கும் அழைப்பு அனுப்பப்பட்டது. அதற்கிணங்கி சாஸ்திரியாரும் அவரது சிஷ்யர்களும் விஜயம் செய்தார்கள். மேள வாத்தியத்துடன் கள்ளர்கள் அவர்களை வரவேற்று, மேலான விருந்து கொடுத்தார்கள்.

பிறகு மகாநாடு கூடிற்று. சாஸ்திரியாரின் பிரசங்கமாவது:—

"சகோதரர்களே! சகோதரிகளே!! இந்த மகாநாட்டிற்கு என்னை "ஸ்பீக்கராக"த் தேர்ந்தெடுத்து எனக்கும், எனது சிஷ்யர்களுக்கும் நீங்கள் அளித்த உபசாரத்திற்கு வந்தனமளிக்கின்றேன். வெகு தூரத்திலிருந்து வந்த சிரமத்தாலும் தேக அசௌக்கியத்தாலும் என்னுடைய பிரசங்கத்தை இன்று சுருக்கமாக முடித்துக் கொள்கின்றேன்.

ஜனங்களின் சுகத்தையும் சௌகரியத்தையும் கருதியே சாஸ்திரங்கள் ஏற்பட்டிருக்கின்றன. அவைகளுக்காக நாம் செய்யும் காரியமெல்லாம் சாஸ்திர சம்மதமேயாகும். சுகத்திற்கும் சௌகரியத்திற்கும் பணம் முக்கியமானது. அதற்காக நாம் செய்யும் காரியமெல்லாம் கடவுளின் சம்மதமே. பொருளுக்காகத் திருடுவதும், பொய் சொல்லுவதும், பிறரை மோசஞ்செய்வதும் பிசகல்ல. உலகிலுள்ள வல்லரசுகள் ராஜ்யங்களை எப்படிக் கைப்பற்றின? இன்றும் கைப்பற்றி வருகிறார்கள். அவர்கள் பொய் சொல்லவில்லையா? மோசஞ் செய்ய வில்லையா? பட்டப் பகலில் கொள்ளை யடிக்கவில்லையா? வாரன் ஹேஸ்டிங்ஸ் என்னும் கவர்னர் ஜெனரல் உமாச்சந்தை பொய்ப் பத்திரத்தால் ஏமாற்றி பணம் சம்பாதித்ததாக சரித்திரம் கூறவில்லையா? இவைகளுக் கெல்லாம் கடவுளின் சம்மதமில்லாவிடில், ஷை வல்லரசுகள் மேன்மையுடன் வாழ முடியுமா? சரித்திரத்தைப் பார்த்தால் பொய், கொலை, களவு முதலியவைகளுக்குப் பயந்தவர்கள் தான் ராஜ்யத்தைக் கைவிட்டிருக்கிறார்கள். இன்று கஷ்டப்படுகிறவர்களும் அவர்களே. நீங்கள் நடத்திவரும் கொலை களவுகளைப்பற்றி கடவுள் சந்தோஷப்படுகிறாரே யன்றி வெறுப்படையவில்லை. அவர் உங்களைக் காப்பாற்றுவாராக. இது நிச்சயம்.

சட்ட புஸ்தகங்கள் என்ன சொல்லுகின்றன? கொலை, களவு செய்வதும், பொய் சொல்லுவதும், மோசஞ் செய்வதும், பிறர் மனைவியை அபகரிப்பதும் பிசகல்ல. அகப்பட்டுக் கொள்ளாமல் சாமர்த்தியமாய் காரியங்களைச் செய்யாததற்குத்தான் தண்டனை. துஷ்டச் செயல்களைச் செய்து அகப்பட்டுக் கொள்ளாமல் சுகமாக இருப்பவர்களை நாம் பார்க்கவில்லையா? ஒன்று மறியாத அப்பாவிகள் சிறையில் தள்ளப்பட்டு தவிப்பதை நாம் காணவில்லையா? நீங்கள் நடத்தும் காரியங்களை கெட்டிக்காரத் தனமாகச் செய்யவேண்டும். இதற்கு அருமையான மந்திர மொன்றிருக்கிறது. இப்பெருங்கும்பலில் போலீஸ் புலிகள் மாறு வேஷத்துடன் மறைவாக வந்திருக்கக்கூடும். அவர்களுக்கு அந்த மந்திரம் தெரியக் கூடாது. இக் கும்பலில் அதைத் தெரிவித்தால் நமக்குத்தான் ஆபத்து. நம்பிக்கையுள்ள தலைவர்கள் என்னிடம் வந்தால், ரகசியமாக அவர்களுக்கு உபதேசம் செய்கிறேன். இது காலம் அமைதியுடனும், சிரத்தையுடனும் நீங்கள் கேட்டுக் கொண்டிருந்ததற்காக வந்தனமளித்து என் பிரசங்கத்தை முடித்துக் கொள்ளுகிறேன். சர்வே, ஜநாஹ, சுகிவேனு, பவந்து.

அக்கிராசனாதிபதி கருப்பையாத் தேவரின் முடிவுரையில் கூறியதாவது:- எனதன்பார்ந்த தோழர்களே! பரமசிவ சாஸ்திரியார் ரூபமாக கடவுளே அவதரித்து நம் இருளை நீக்க இங்கு தோன்றியிருக்கின்றார். நாம் நடத்திவரும் காரியங்கள் பிசகென்றும், அதற்காகத்தான் நமக்குத் தண்டனை விதிக்கப்படுகிறதென்றும் இதுகாலம் எண்ணிவந்தோம். ஆனால், உலகிலுள்ள வல்லரசுகளெல்லாம் நம் வழியைத்தான் பின்பற்றுகின்றனர். கவர்னர் ஜனரல் ஒருவனை ஏமாற்றி கோடி ரூபாய் பெற்றானென்றால் அவனுக்குத் தோடா, கங்கணம் முதலியன அளிக்கப்படுகின்றன. நாம் ஏமாற்றினால் நமக்கு கைமேல் விலங்கு. இதுதான் சர்க்கார் வழங்கும் நியாயம். இதற்குக்காரணம் நம்முடைய அடிமைத்தனந்தான். நமக்குள்ளிருக்கும் துரோகிகளினால்தான் நாம் இந்த ஈன ஸ்திதியிலிருக்கின்றோம். நம்மிடம் ஆயுதபலமில்லாததால், மந்திர பலத்தால்தான் நாம் எதிரிகளை வெல்லக்கூடும். துரோகிகளுக்குப் பயந்து சாஸ்திரியார், மந்திரத்தைப் பகிரங்கமாகக் கூறவில்லை. நமக்குள் ஜாதி விஸ்வாசமுள்ளவர்கள் அவரிடம் சென்று மந்திர உபதேசம் பெறவேண்டும். சாஸ்திரியாரே இனி நம்முடைய குல தெய்வம். அவர் நீடூழி வாழ்க.

பின்னர் ஒவ்வொரு நாளும் மந்திர உபதேசம் பெற யோக்கியதையுள்ள கள்ளர் தலைவர்கள் அநேகர் சாஸ்திரியாரிடம் சென்றார்கள். சாஸ்திரியார் செய்த உபதேசமாவது:—

நீங்கள் அபகரிக்கும் பொருள்களை என்னிடம் கொண்டுவந்தால் தக்க சன்மானம் செய்து உடனே அனுப்பி விடுவேன். பிறகு எது வந்தாலும் நான் பார்த்துக்கொள்ளுகிறேன். நீங்கள் கவலையற்றிருக்கலாம். அசந்தர்ப்பமாக அகப்பட்டுக்கொண்டாலும் பொய்ச் சாட்சிபத்தாலும், ரிக்கார்டு ஜோடனையாலும் உங்களைக் காப்பாற்றுவேன். என்னிடமிருக்கும் சிஷ்யர்கள் பொய்ச் சாட்சி சொல்லுவதிலும், ரிக்கார்டு ஜோடனை செய்வதிலும் மிக்க சமர்த்தர்கள். வேஷத்தாலும், சாதுரியத்தாலும் தாங்கள் யோக்கியர்களென்றும், சத்தியசீலர்களென்றும் அதிகாரிகள் நம்பும்படி நடித்து எளிதில் ஜெயித்து விடுவார்கள். யுகாந்தரம் பிரட்டிப்பிரட்டிக் கேட்டாலும் அவர்கள் ஏமாற மாட்டார்கள். கைதேர்ந்த வக்கீல்கள் எவ்வளவோ முட்டிப் பார்த்தும் அவர்களை அசைக்க முடியவில்லை. இதுதான் நான் உபதேசிக்கும் மந்திரம் என்று வெகு ரகஸ்யமாகக் கூறினார். களவு செய்த பொருள்களை எல்லாம் கள்ளர்கள் சாஸ்திரியாரிடம் கொடுத்து வந்தார்கள். பதினாயிரம் ரூபாய் பெறுமான பொருள்களை ரூபாய் ஆயிரத்துக்கு மதிப்பிட்டு, தன்னுடைய கமிஷன் ரூபாய் ஐநூறு போக பாக்கி ரூபாய் ஐநூறையும் சாஸ்திரியார் தாராளமாக சன்மானம் செய்து வந்தார். இதனால் இரண்டு மூன்று மாதங்களில் சாஸ்திரியார் கோடீஸ்வரரானார்.

நான்காவது மாதம் சாஸ்திரியார் ஐந்து வருடக் கடுங்காவலில் செக்கு இழுத்துக்கொண்டிருந்தார்!





# உலக நெருக்கடியில் உருக்குலையா வாழ்க்கை

## குடியரசு விடிந்ததும் செக்கோஸ்லவகியா எழுந்ததும்

### 100-க்கு 97 பேர் கல்வி கற்ற அதிசயம்

[இப்பொழுது உலக முழுதும் செக்கோஸ்லோவகியாவையே கூர்ந்து கவனிக்கிறது; ஏனெனில் செக்கோஸ்லோவகியா ஒரு குடியரசு நாடு. அடுத்தபடியாக இக் குடியரசுக்கும் எவரேனும் 'உலை' வைத்துவிடப் போகிறார்களோ என்னவோ என நம்போன்றார் பதைக்கின்றார்.

இந்நாடு எப்போது குடியரசு பெற்றது, இதன் ஜனத்தொகை என்ன, எந்த எந்த இனத்தவர் இதில் குடியேறியுளர், கல்வியறிவு எவ்வளவு, தொழிலென்ன என்கிற சகல விபரங்களும் இங்கு தரப்பட்டுள்ளன.]

★

செக்கோ ஸ்லோவகியா என்ற நாடு ஐரோப்பாவில் இருக்கிறது. இந்நாட்டைச் சுற்றி ஜர்மெனி, போலந்து, ஹங்கேரி, ஆஸ்டிரியா போன்ற நாடுகள் இருக்கின்றன.

இது இப்போது குடியரசு நாடு. 1919-ம் ஆண்டில் ஏற்பட்ட வேர்சேல்ஸ் ஒப்பந்தப்படி இது குடியரசாயிற்று. இவ்வொப்பந்தத்தாலும், 1920-ல் ஏற்படுத்தப்பட்ட எல்லை நிர்மாணப்படியும் செக்கோ-ஸ்லோவகியாவில் இப்போது பொஹீமியா, மொரேவியா, சைலேஸியா, ஸ்லோவகியா, கார்பேதியன் ருதேனியா ஆகிய பாகங்கள் அடங்கியுள்ளன. அதாவது ஜர்மெனி, ஆஸ்ட்ரியா, பொஹீமியா, ஹங்கேரி ஆகிய நாடுகளுக்குச் சொந்தமாயிருந்த சில பகுதிகள் செக்கோஸ்லோவகியக் குடியரசில் சேர்க்கப்பட்டன.

இந்நாடு மொத்தம் 54,244 சதுர மைல் விஸ்தீரணமுள்ளது. இது பற்பல நாடுகளைத் தொட்டுக்கொண்டிருக்கிறது. இதன் அதிகமான நீளம் 625 மைல்கள்; அதிகமான அகலம் 190 மைல்கள்.

செச்கோ ஸ்லோவகியாவில் பல்வேறு மக்களும் குடியேறியிருக்கிறார்கள். அதன் ஜனத்தொகையும் பல்வேறு மக்கள் எண்ணிக்கையும் கீழே தரப்பட்டுள்ளது:—

| | லட்சம் |
|---|---|
| செக்கியர் | 73·4 |
| ஸ்லோவகியர் | 23·5 |
| ஜர்மானியர் | 32·3 |
| மகியார் | 6·9 |
| ருத்தீனியர், ருஷ்யர், உக்ரேனியர் | 5·5 |
| யூதர் (தேச உரிமையால்) | 1·9 |
| (பிறந்த மதத்தால்) | 3·6 |
| போலர் | ·8 |
| இதர இனத்தவர் | ·5 |
| அன்னியர் | 2·5 |
| மொத்த ஜனத்தொகை | 147·3 |

எனவே, மொத்த ஜனத்தொகையில் ஜர்மானியர் கால் பங்கு இருக்கிறார்கள். அவர்கள் செக்கோஸ்லோவகியாவில் 5-ல் 1 பாகத்துக்கு சிறிது அதிகமான விஸ்தீரணத்தில் பரவி வசிக்கிறார்கள்.

ஜர்மானியர் கீழ்த்திசையில் பரவ முடியாதபடி வேண்டுமென்றே பிரெஞ்சு அரசியல் வாதிகள் இத்தகைய குடியரசுக்கு அடிகோலினார்கள் என்று சிலர் சொல்லுவதுண்டு. இது தவறு.

முன்பு ஸ்லோவகியர் ஹங்கேரியின் ஆட்சிக்கு உட்பட்டுக் கிடந்தார்கள். செக்கியர் ஆஸ்ட்ரிய ஆட்சிக்கு உட்பட்டிருந்தார்கள். ஜர்மானியரைவிட மகியார் கையாண்ட முறை மகாக் கொடிது. எல்லா ஸ்லோவகிய இலக்கணப் பள்ளிக்கூடங்களும் மூடப்பட்டன. ஸ்லோவகிய புத்தகச் சங்கம் கலைக்கப்பட்டது. மாதா கோயில்களில்கூட மகியார் உணர்ச்சியில் பிரசாரம் புரியப்பட்டது.

#### செக்கியர் போர்க் குணம்

யுத்தத்தில் தீவிரமாக செக்கியர் இறங்காதிருந்தனர். எனினும், அண்மையில் அவர்கள் தங்கள் நேச தேசங்களுக்கு உதவிபுரிவதில் மிகத் துணிவு கொண்டுவிட்டார்கள். இதுகால் அவர்கள் உலக முழுதும் பரவி, 'மப்பீ' எனும் பெயரைக்கொண்ட ஒரு பெரும் புரட்சி இயக்கத்தை ஸ்தாபிக்கவும் ஆரம்பித்துவிட்டனர்.

உள்நாட்டு விஷயங்களிலே, இருபது ஆண்டுகளில் செக்கோஸ்லோவகியா குழந்தைப் பருவத்திலிருந்து திடமான ஆள் பருவத்தை அடைந்திருக்கிறதென்றே சொல்ல வேண்டும். 1918-ம் ஆண்டில், உயர்ந்த சிவில் உத்தியோகங்களுக்கும் இராணுவ உத்தியோகங்களுக்கும் போதுமான அளவு ஆட்கள் கிடைக்காமலிருந்தது. முன்பிருந்த ஆஸ்ட்ரோ—ஹங்கேரிய மக்களை இவர்கள் நம்புவதில்லை. முக்கிய இராஜ தந்திரக் காரியாலயத்தில் இவர்களைச் சேர்ப்பதேயில்லை. எனவே, கல்வியறிவை ஏராளமாய்ப் புகுத்த வேண்டிய பாரம் இந்நாட்டுத் தலைவர்கள்மீது விழுந்தது. இதன்படியே தலைவர்கள் மிகுந்த பிரயாசை எடுத்துக்கொண்டனர். பிரேக்கில் ஏற்கனவே இருந்த ஒரு சர்வகலாசாலை போக இன்னும் இரண்டு சர்வகலாசாலையை ஏற்படுத்தினார்கள். வர்த்தகம், விவசாயம், காட்டிலாகா ஆகியவைகட்குப் பல டெக்னிகல் கல்லூரிகளையும் உண்டாக்கினர். புதிய விஞ்ஞான ரிசர்ச் கலாசாலை ஸ்தாபித்தனர்.

இன்றைக்கு செக்கியரில் **100-க்கு 97** பேர் படித்தவர்கள்! ஸ்லோவகியரில் **100-க்கு 85** பேர் படித்தவர்கள்! இராணுவத் தற்காப்பிலேயும் மிகுந்த கவனத்தைச் செலுத்தி வருகிறார்கள். ஆண்கள் பெண்கள் ஆகியோரில் **6** வயதுக்கு மேல் **50** வயதுக்குள்ளாக உள்ள சகலரும் இராணுவ சேவை புரிகின்றாற்போல புதிய சட்டங்கள் ஏற்படுத்தப்பட்டுள்ளன.

#### பொருளாதாரம்

பொருளாதாரத்தில் இந்நாட்டுக்கிருந்த கஷ்டத்தைச் சொல்லிமுடியாது. சாம்ராஜ்யம் முறிந்ததும், புதிய நாணயச் செலாவணி முறையும் உள்நாட்டிலேயே வர்த்தக ஒப்பந்தங்களும், அந்நியநாட்டு வர்த்தக ஒப்பந்தங்களும் செய்யவேண்டி நேரிட்டது. ஆஸ்ட்ரியா, ஹங்கேரியா நாணயச் செலாவணி மேலும் மேலும் புகுந்து கொண்டிருப்பதைத் தடுப்பதுதான் அவர்களுக்கு முதல் வேலையாய் இருந்தது. ஆஸ்ட்ரோ—ஹங்கேரிய பாங்கியின் நோட்டுகளை, முத்திரையிட்டு செக்கோஸ்லோவகியாவுக்குள் செலாவணியாகிக்கொண்டிருக்கும்படி விதி செய்தார்கள். முத்திரையிடப்பெறாத நோட்டுகள் செலாவணி முறையிலிருந்து நீக்கப்பெற்றன. இதன் மூலம் சாஸ்வதமான பூரணசுயேச்சை கொண்ட நாணய செலாவணி முறை ஏற்படலாயிற்று. ஆஸ்ட்ரியப் பொருளாதார முறைக் காலத்திலே, அதாவது 1922-வது ஆண்டில், மிகக் கேவலமாக செக்கியர் கிரவுன் தனது மதிப்பில் 20-ல் ஒரு பங்குக்குக் குறைந்துபோயிற்று. ஆனால் ஒரே ஆண்டுக்குள் தன் மதிப்பில் 6-ல் ஒரு பங்கை வகித்து, அதுமுதல் அதையே காப்பாற்றிவருகிறது. 1934-ம் ஆண்டில் ஏற்பட்ட உலக நாணயமதிப்புக் குறைவு அலங்கோலத்தில் கூட, செக்கோஸ்லோவேகியா பெரிதளவாய்ப் பாதிக்கப்படாமலேயிருந்தது. ஆஸ்ட்ரியா, ஹங்கேரி, ஜெர்மெனி முதலிய தேசங்களில் இப் பொருளாதாரக் குழப்பம் எப்படியிருந்ததென்பதை நினைக்கும்போது, இது எவ்வளவு பெரிய காரியசித்தி!

#### விவசாயமும் கைத்தொழிலும்

செக்கோஸ்லோவகியாவில் இப்போது 100க்கு 39 பேர்கள் விவசாயிகளாவர்; 100க்கு 33பேர்கள் தொழிலாளர்கள். செக்கியர் விவசாய முறை மிக்க உயர்தரமானது. இவர்களுடைய பிரதான விவசாயம் சர்க்கரைதான். பீட்ரூட் சர்க்கரையில் செக்கோஸ்லோவகியா உலகத்திலேயே இரண்டாவது ஸ்தானத்தை வகிக்கிறது. (முதலாவது ஜர்மெனி) இதுதான் மிக ஏராளமான சரக்கை ஏற்றுமதிசெய்கிறது.

மரம், காகிதம், நெசவு, தோல் முதலிய தொழில்களில் செக்கோஸ்லோவகியா பிரக்யாதி பெற்றதாகும். மற்றும் பல உலோகங்களிலும் இது சிறந்தது. கண்ணாடிகள், மட்பாண்டங்கள், போர்ஸிலெயின் சரக்குகள், ஆகிய இயந்திர முறைத் தொழில் இங்கு ஏராளம்.

1937ல் இதன் வருமானம் 8456 கிரவுன். செலவு 8454 கிரவுன்.

மதமும் தேச உரிமையும்தான், இக் குடியரசுக்கு முதலில் பெரும் பிரச்னைகளாயிருந்தன. 100க்கு 67 பேர்கள் ரோமன் கத்தோலிக்கர். ஆனால் இப்போது மதம் ஒரு பிரமாதமான பிரச்னையாகத் தோன்றுவது கிடையாது.

ஆனால், இன்று உலகத்தை மீண்டும் ஓர் யுத்தத்துக்குட்படுத்த மிரட்டிக் கொண்டிருப்பதும் ஐரோப்பிய அரசியல் நிருபர்களுடைய மூளைக்குத் தொந்திரவு கொடுத்துக் கொண்டிருப்பதும் செக்கோஸ்லோவகியாவின் தேச உரிமைதான்.

முக்கியமாக 32½ லட்சம் ஜர்மானியருடைய விஷயந்தான் பெருத்த பிரச்னையாக இருந்து வருகின்றது. இவர்கள் அரசியலில் நல்ல பக்குவத்தை அடைந்தவர்கள். பொருளாதாரத்தில் பலம் பொருந்தியவர்கள். செக்கோஸ்லோவகியா பூரண சுயேச்சை பெறுவதற்கு முன்னம் இந் நாட்டை ஆட்சிபுரிந்த பெரும்பான்மைக் கூட்டத்தைச் சேர்ந்தவர்களுமாவர்.



#### ஓர் திருத்தம்

25—8—1938 ஊழியன் பத்திரிகை 9-ம் பக்கத்தில் செருப்பால் அடித்தவருக்கு ரூ. 30 அபராதம் என்ற தலைப்பில் எழுதியிருக்கும் செய்தியில் வேலங்குடி கருப்பணன் அம்பலத்தை லெட்சுமணன் அம்பலம் செருப்பால் அடித்ததாகவும், ஷை லெட்சுமணனம்பலத்துக்கு ரூ. 30 அபராதம் விதிக்கப்பட்டதாகவும் எழுதியிருப்பது தவறு. லெட்சுமணனம்பலத்தைத்தான் ஷை கருப்பணனம்பலம் அடித்தாரென்றும் அதற்காக கேஸ் நடந்து ஷை கருப்பணனம்பலத்துக்கு ரூ. 30 அபராதமும் கோர்ட்டு செலவும் கொடுக்கும்படி தேவகோட்டை ஜாயிண்டு மாஜிஸ்திரேட் கோர்ட்டில் தீர்ப்புச் சொல்லப்பட்டதென்றும் இப்போது அறிவிக்கப்படுகிறது.

## ஓர் மறுப்பு

காரைக்குடி முனிசிபல் கவுன்ஸிலர் திரு. ஆரு. ஆ. ராம. சொக்கலிங்கம் செட்டியார் எழுதுவதாவது:—

விதவா விவாகம் என்பது சமூக சீர்திருத்தத்தில் ஓர்பகுதி. இதனை அரசியல் கலப்பற்ற சீர்திருத்த வாதிகளென்போரும் தனி அரசியல் வாதிகளென்போரும் மறுக்க முடியாத உண்மை.

சமூக சீர்திருத்தமும், அரசியல் சீர்திருத்தமும் மனித உருவத்தால் இருப்பவர்கட்கு இரு கண்கள் போன்றவை. அவைகளில் ஒன்றை விடுத்து ஒன்றைச்செய்தால் அதனைப்பரிபூரண சீர்திருத்தம் என்று கூற முடியாது. பொது மக்களின் நன்மையை நாடுகின்ற ஒவ்வொருவரும் மேற்கூறிய இருவகை சீர்திருத்தங்களையும் தன் பிறப்புரிமையாகக் கொள்வதே சீரிய கொள்கையாகும்.

ஆனால் அரசியல் வாதிகளென்போர், சமூகச் சீர்திருத்தம் இப்பொழுது தேவையில்லை என்றும், அரசியல் சீர்திருத்தம் அடைந்தால் சமூகச் சீர்திருத்தம் மிக இலகுவில் கிடைக்குமென்றும் சொல்லுகிறார்கள். அதுபோலவே 'சமூக சீர்திருத்த வாதிகள், சமூக சீர்திருத்தம் கிடைத்தால் அரசியல் சீர்திருத்தம் மிக இலகுவென்றுகூறுகிறார்கள். இந்த மனப்பான்மை படைத்தவர்களை பிற்போக்காளர்களென்றே சொல்லவேண்டும். சமூக சீர்திருத்தம் அரசியல் சீர்திருத்தத்திற்கும் சமூகச் சீர்திருத்தத்திற்கும் ஒன்றுக்கொன்று தவிர்க்க முடியாத உதவியளிக்கக் கூடியதென்பதை எந்த அறிவாளியும் மறுக்கமாட்டான்.

இதே கருத்தைத்தான் சென்ற 21—8—38ல் காரைக்குடி மாதர் மறுமண சகாய சங்கத்தில் திரு. பட்டு வய்யருக்கும், திருமதி கிருஷ்ணம்மாளுக்கும் நடைபெற்ற மறுமணத்தின் போது குறிப்பிட்டேன். அதுபற்றி 'ஊழியனி'ல் ஓர் உள்ளூர்நிருபர் எழுதியிருப்பது மிக வேடிக்கையாக விருக்கிறது. திருமணத்திற்கும் அரசியலுக்கும் சம்பந்தமில்லை என்றும் அரசியலைவிட சீர்திருத்தத்துறையே பிரதானமானதென்று பொருள்படவும் நான் கூறியதாக அந்த நிருபர் எழுதுகிறார்.

அரசியலைவிட சீர்திருத்தத் துறையோ, சீர்திருத்தத் துறையைவிட அரசியலோ பிரதானமான தென்று நான் கருதுபவனல்ல. அப்படி நான் அங்கு சொல்லவுமில்லை.

குறிப்பு:—அன்று திருமணத்திற்கு "ஊழியன்" ஆசிரியரும் சென்றிருந்தார். நிருபர் கூறியபடி தாம் பேசவில்லையென்று அன்பர் ஆரு. ஆ. ராம. சொ. அவர்கள் மறுப்பது ஆச்சரியமாகவே இருக்கிறது. இதுபற்றி விரித்துச் சொல்வது வீண் வேலை. அன்று கூட்டத்திலிருந்தோர்உண்மை அறிவர். பேசியது வேறு விதமாக இருந்தபோதினும் இப்போது தம் கருத்து இதுதான் எனத் திரு. சொ. அவர்கள் கூறுவதைப் பாராட்டலாம். மறுப்பில் தமக்குச் சம்பந்தமில்லாத வேறு சில விஷயங்கள் கூறப்பட்டன. அவற்றை வெளியிட்டு விவாதத்திற்கு விடுதல் விரிவுக்கு இடந்தருவதாகும். ஆதலால் அப்பகுதி நீக்கப்பட்டது.

ஆசிரியன்.

---

காரைக்குடி

# நகரசபை

## விந்தியமலை தாண்டிவரும் சந்திரருக் குபசாரம்

### கல்லுக்கட்டியில் தீயணைக்கும் மோட்டார்

(நமது நிருபர்)

நகர சபைத் தலைவர் ஸ்ரீ. ராய. சொக்கலிங்கன் தலைமையில், காரைக்குடி நகரசபையின் சாதாரணக் கூட்டம் சென்ற சனிக்கிழமை 27-8-38-ல் நடந்தது. இக்கூட்டத்துக்கு 10 அங்கத்தினர்கள் விஜயம் செய்திருந்தார்கள்.

'ராஷ்ட்ரபதி சுபாஷ் சந்திர போஸ் காரைக்குடிக்கு விஜயம் செய்யும்பொழுது, நகர சபை ஒரு வரவேற்புப் பத்திரம் வாசித்தளிக்கவேண்டும்'

என்று ஸ்ரீ. ஆரு. ஆ. ராம. சொக்கலிங்கம் செட்டியார் கொண்டுவந்த தீர்மானம் ஏகமனதாய் நிறைவேறியது.

ஆதித் திராவிடர் தெரு அகலமாகிறது

11-வது வார்டிலுள்ள ஆதித்திராவிடர் தெருவில் தண்ணீர்க் குழாய்க்குத் தென்புறம் மிகக் குறுகலாயிருப்பதால், இத்தெருவை விசாலப்படுத்த வேண்டுமென்று வைஸ்-சேர்மன் திரு. கெ. மு. லெ. மெய்யப்பனம்பலம் பேரால் கொண்டுவரப்பெற்ற தீர்மானமும் நிறைவேறியது. மற்றும்,

12-வது வார்டு வெ. ராம. சந்தியிருக்கிற 1154 நிர். மின்சார விளக்கை எடுத்து வெ. ராம. வீட்டுப் பக்கத்தில் போடுவதென்றும்; முரு. நா. சித. வீட்டுக்கோஞ்சல் கட்டிடத்துக்குப் பக்கத்தில் புதிதாய் ஓர் விளக்குப் போடுவதென்றும்; வடக்கு வல்லம்பர் தெருவிலிருந்து அரு. அ. வெ. வீதியிலிருக்கும் கான்வரையில் கான் கட்டவேண்டுமென்றும்;

9-வது வார்டு முனீஸ்வரன் கோவில் சந்தியிலிருக்கும் பாலம் கைப்பிடிச் சுவர் கெட்டுப்போயிருப்பதால், அதை உயர்த்தி ரிப்பேர் செய்வதென்றும் திரு. முரு. அருணாசலம் செட்டியாரால் கொண்டுவரப்பெற்ற தீர்மானங்கள் நிறைவேறின.

கல்லுக்கட்டியில் தீயணைக்கும் மோட்டார்

தீ விபத்து ஏற்படுவதாயின் உடனே உதவியாயிருக்கும் பொருட்டு கல்லுக்கட்டியில் அல்லது அதற்குச் சமீபமாகவுள்ள ஓர் இடத்தில் தீயணைக்கும் மோட்டார் வண்டி நிற்க ஓர் ஷெட் ஏற்படுத்தவேண்டுமெனவும், இராக்காலங்களில் இவ்வண்டி நிறைய தண்ணீர் இருக்கவேண்டுமெனவும், ஷெட்டிலேயே டிரைவரும் உதவியாட்களும் இருக்கவேண்டுமெனவும் ஏற்பாடு செய்யும்படி திரு. தி. ம. நடராஜன் கொண்டுவந்த பிரேரணையும் நிறைவேறியது.

வாரச் சந்தையும் கால்நடைச் சந்தையும்

வாரச் சந்தையை நடத்துவதற்குத் தகுதியான ஒரு இடத்தைக் குறிப்பிடுவதற்கு ஸ்ரீமான்கள் ராய. சொக்கலிங்கன், கெ. மு. லெ. மெய்யப்பனம்பலம், ஆரு. ஆ. ராம. சொக்கலிங்கம் செட்டியார் ஆகிய மூவரும் கொண்ட கமிட்டி நியமிக்கப்பட்டது.

3-வது வார்டில் சுமார் இரண்டரை ஏக்கர் விஸ்தீரணமுள்ள இடத்தில் கால்நடைச் சந்தை கூடுவதற்கு லைசென்ஸ் கோரியிருந்த ஸ்ரீ வெ. கரு. வேடப்பன் சேர்வையின் மனுச்சம்பந்தமாக, ஹெல்த்ஆபீசர் ஸ்தலத்தைமீண்டும் பார்வையிட வேண்டியிருப்பதை முன்னிட்டு ஒத்திவைக்கப்பட்டது.

பாடசாலைகளுக்காக அக்விஸிஷன்

முனிசிபல் ஆண் பெண் பாடசாலைகள்கட்டுவதற்காகவும் பார்க் அமைப்பதற்காகவும் முத்துப்பட்டணம் 7-வது வார்டில் துவாதஸிமடத்திற்கும் நந்தவனத்திற்கும் வடக்கே, தென்வடல் வீதிக்குக் கிழக்கே-கிழமேல் வீதிக்கும் முத்தூரணிக்கால்வாய்க்கும் தெற்கே-முத்து. கரு. வெ. கவுல் இடத்துக்கும் மேற்கே உள்ள இடத்தை அக்வயர் செய்வதென்று தீர்மானிக்கப்பட்டது.

தொழில் வரி விகிதம்

தொழில் வரி விகிதத்தை அதிகரிக்கும் விஷயமாக, பொருளாதாரக் கமிட்டி ஏற்கனவே இருந்து வந்த வரி விகிதம் போதுமானதென்று கண்ட முடிபு அப்படியே ஒப்புக்கொள்ளப் பட்டது.

முசாபரி பங்களா

முனிசிபல் முசாபரி பங்களா காவல்காரனின் வீட்டை ரிப்பேர் செய்ய ரூ. 25ம், செஞ்சையிலுள்ள முனிசிபல் பள்ளிக்கூட காம்பவுண்டு சுவற்றை ரிப்பேர் செய்ய ரூ. 55ம் இன்னும் சில எஸ்டிமேட்டுகளும் சாங்ஷன் செய்யப்பட்டன.

விபசார ஒழிப்புச் சங்கம்

காரைக்குடி விஜிலன்ஸ் அஸோஸியேஷனுக்கு (விபசார ஒழிப்புச் சங்கம்) ரூ. 25 கொடுப்பதெனவும் முடிவிட்டது.

---

### ராஷ்டரபதி சுபாஷ் வருகை

இந்திய தேசியக் காங்கிரஸின் தலைவர் ஸ்ரீ சுபாஷ் சந்திரபோஸ், நாளை செப்டெம்பர் 2-ல் சென்னை வந்து சேருகிறார்.

தமிழ்நாடு, கொச்சி, மைசூர், திருவாங்கூர் முதலிய பிரதேசங்களில் அவர் சுற்றுப் பிரயாணம் செய்வாரென்று அதற்கு மிக மும்முரமான ஏற்பாடுகள் செய்யப்பட்டிருக்கின்றன.

ராஷ்ட்ரபதியின் தென்னாட்டுச் சுற்றுப் பிரயாணம் சுமார் மூன்று வாரங்கள் வரையில் நடக்குமென எதிர்பார்க்கப்படுகிறது.

தமிழ் நாட்டிலுள்ள ஏராளமான ஸ்தல ஸ்தாபனங்களும் சங்கங்களும் காங்கிரஸ் தலைவருக்கு மகத்தான வரவேற்பு அளிக்கவேண்டுமென, தீர்மானங்கள் நிறைவேற்றி,செலவுக்காக பணம் ஒதுக்கி, உரிய ஏற்பாடுகளும் துரிதமாய் நடந்துவருகின்றன.

சென்னை நகரசபை, சேலம் நகரசபை, காரைக்குடி நகரசபை, திருவண்ணாமலை தாலூகா காங்கிரஸ் கமிட்டி, திருப்பூர் நகர காங்கிரஸ் கமிட்டி, சீர்காழி நகர காங்கிரஸ் கமிட்டி, வடக்கு ராமநாதபுரம் ஜில்லா போர்டு, சென்னை ஜவகர் நகர காங்கிரஸ் சபை, சென்னை மாணவர் சங்கம், வடக்கு சென்னையிலுள்ள 5 டிவிஷன்கள் முதலியவை ராஷ்ட்ரபதிக்கு வரவேற்பளிக்கும் ஸ்தாபனங்களில் சிலவாகும். தமிழ்நாடு முழுதும் ஆயத்தமாகிறது என்பதைக் காட்டுவதற்காகவே இங்கு சிற்சில ஸ்தாபனங்களை மட்டும் குறிப்பிடப்பட்டுள்ளன.

---

### புதுவயல்

#### கிராமக் காங்கிரஸ் கமிட்டிக்கூட்டம்

புதுவயல் கிராமக் காங்கிரஸ் கமிட்டிக் கூட்டம் 20-8-38 அன்று தலைவர் திரு. சுப. நாராயணன் தலைமையில் கூடி அடியிற்கண்ட தீர்மானங்கள் தீர்மானிக்கப்பட்டன.

இவ்வூரில் புதிதாக இரும்புக் கம்பத்தில் காந்தி விழாவின்போது தேசியக் கொடியை ஏற்றி வைப்பதென்றும், இவ்வூர் எல்லைக்குட்பட்ட கோவில்களில் உள்ள தென்னை, பனைகளை கள் குத்தகைக்கு விடாதபடி ஷை கோவில் டிரஸ்டிகளைக் கேட்டுக் கொள்ளப்பட்டது. இன்னும் பல தீர்மானங்களும் நிறைவேற்றப் பெற்றன.

---







# அரசியல் அடிமைத்தனம் ஆயுளையும் குறைக்கும்

## சர்வ தேச சங்கத்தின் புள்ளி விபரங்கள் பேசுகின்றன

### செப்டம்பர் மாத 'மாடர்ன் ரெவ்யூ'வின் கருத்து

[அரசியல் அடிமைத்தனத்தால் செல்வம், தேசத்தின் உரிமை, கௌரவம் முதலியனவே இழக்கப்பட்டிருக்கின்றன எனப்பலர் நினைக்கக்கூடும்.ஆனால் அடிமைத் தேசத்தில் வாழும் மக்களுடைய ஆயுட்காலம்கூடக் குறைந்துவிடுகிறது என்பதைக் கேட்கும்போதே யார்தான் திகில்கொள்ளாதிருப்பர் ? அடிமைத்தனம் ஆயுட்காலத்தை எவ்வாறு பாதிக்கின்றதென்பதை வாசகர்கள் இதில் காணலாம்.]

★

ஒவ்வொரு தேசத்திலும் மரணக் கணக்கு வைத்திருக்கிறார்கள். இந்தக் கணக்கிலிருந்து ஒவ்வோர் குறிப்பிட்ட வயதிலும் எத்தனை ஆண்கள், எத்தனை பெண்கள் இறந்துபோகிறார்கள் என்கிற விபரம் தெரிகிறது. இதன்மூலம் சாதாரணமாக அந்தக்காலத்தில் மக்களுடைய ஆயுட்காலம் எத்தனை என்பதை ஒருவாறு நிர்ணயிக்க முடிகிறது (ஆண்களுக்கும் பெண்களுக்கும் வெவ்வேறாய்.)

'லைப் இன்ஷியூரன்ஸ்' கம்பெனிகளில் ஈடுபட்டுள்ளவர்களும் மேற்சொன்ன கணக்கு விபரங்களை எடுத்து வருகிறார்கள். பல வருடாந்தரப் புத்தகங்கள்கூட இப்படிப்பட்ட விபரங்களைத் தயாரித்து, அந்த அந்தக் காலங்களில் மக்களுடைய ஆயுள் இன்னது என்பதை முன்கூட்டியே வெளியிடுகின்றன. கடைசியாக நம் கைக்குக் கிடைத்திருப்பது சர்வதேச சங்கத்தாரின் புள்ளி விபர வருடாந்தரப் புத்தகமேயாகும். 1937–38-ம் ஆண்டுப் புத்தகம் இது. சென்ற ஜூலையில்தான் வெளியாயிற்று; பிறந்ததுமுதல் 70 வயதுவரையில் உள்ள ஆயுட்காலக் கணக்குகள் இதில் அடங்கியுள்ளன. எனினும், ஜனனத்திலிருந்து தயாரிக்கப்பட்ட ஆயுள் கணக்குமட்டும் போதும்.

பிறந்ததும், ஆயுட்காலம் அந்த அந்தத்தேசத்தில் கீழ்க்கண்டபடி இன்னது என்று எதிர்பார்க்கப்படுகிறது:—

| | ஆண்கள் வயது | பெண்கள் வயது |
|---|---|---|
| எகிப்து | 31 | 36 |
| கானடா | 58·96 | 60·73 |
| ஐக்கிய அமெரிக்கா (வெள்ளையர்) | 60·72 | 64·72 |
| (வெள்ளையரல்லாதார்) | 50·82 | 53·74 |
| இந்தியா | 26·91 | 26·56 |
| ஜப்பான் | 44·82 | 46·54 |
| ஜெர்மெனி | 59·86 | 62·81 |
| ஆஸ்திரியா | 54·47 | 58·93 |
| பெல்ஜியம் | 56·00 | 59·83 |
| பல்கேரியா | 45·92 | 46·64 |
| டென்மார்க் | 62·00 | 63·08 |
| எஸ்டோனியா | 53·12 | 59·60 |
| பின்லாந்து | 50·68 | 55·14 |
| பிரான்ஸ் | 54 30 | 59·02 |
| அயர்லாந்து | 57·37 | 57·93 |
| இத்தாலி | 53·76 | 56·00 |
| லாட்வியா | 55·39 | 60·93 |
| நார்வே | 60·98 | 63·84 |
| நெத்தர்லண்ட்ஸ் | 61·09 | 63·05 |
| இங்கிலாந்தும் வேல்ஸூம் | 60·13 | 64·39 |
| ஸ்காட்லந்து | 56·00 | 59·05 |
| வட அயர்லாந்து | 55·42 | 56·11 |
| ஸ்வீடன் | 61·19 | 63·33 |
| சுவிட்சர்லாந்து | 59·26 | 63 05 |
| செக்கோ-ஸ்லவகியா | 51·92 | 55·18 |
| சோவியத் ருஷ்யா (ஐரோப்பாவிலுள்ளது) | 41·93 | 46·79 |
| ஆஸ்திரேலியா | 63·48 | 67·14 |
| நியூஜீலாந்து | 65·04 | 67·88 |

ஐரோப்பிய நாடுகளிலும் அமெரிக்க நாடுகளிலும், இந்தியாவில் எதிர்பார்ப்பதைவிட அதிகமான ஆயுட்காலத்தை எதிர்பார்க்கப்படுகிறது என்று இப் புள்ளி விபரங்களிலிருந்து நன்றாகப் புலப்படுகிறது அல்லவா? இந்தியாவிலுள்ளதைக் காட்டிலும் ஜப்பானில் ஆயுட்காலம் மிக அதிகம். எகிப்தில் கூட இந்தியாவிலுள்ளதைவிட அதிகமாயிருக்கிறது. இந்தியாவைக்காட்டிலும் அதிகமாயுள்ள தேசங்களில் பெரும்பாலானவை சுயேச்சை நாடுகளாகும். கானடா, அயர்லாந்து, ஆஸ்திரேலியா நியூஸீலாந்து ஆகிய தேசங்கள் நடைமுறையில் சுதந்தரமுள்ளவை. எகிப்து பூரண சுயேச்சைபெற்ற நாடாக இல்லாதபோதிலும், அதுகூட இந்தியாவைவிட அதிகமான சுதந்தரத்துடன் வாழ்கிறது. கிட்டத்தட்ட எல்லா உள்நாட்டு வியவகாரங்களிலும் எகிப்து சுயாட்சியை வகித்து வருகிறது.

#### அரசியலும் ஆயுட்காலமும்

ஒவ்வொரு தேசமும் தான் விரும்புகிற அரசியல் நிலைமையைத் தெரிவிப்பதற்கு அரசியல் சுதந்திரம், அல்லது சுயேச்சை, அல்லது சுய ஆட்சி அல்லது வேறெந்தச் சொல்லைக்கொண்டாவது தெரிவித்தாகவேண்டும். அப்படி வெவ்வேறு சொற்களால் உணர்த்தப்படுகிற—ஒவ்வொரு தேசமும் விரும்புகிற அரசியல் சுதந்தரத்தைப் பொறுத்து அந்த அந்தத் தேச மக்களின் ஆயுட்காலமும் அமைகின்றதென்பது மேற்கண்ட புள்ளி விபரங்களால் நன்கு புலனாகிறது. அரசியல் நிலைமையைப் பொறுத்து ஆயுட்காலம் மாறுபடுவானேன் ?

நீண்ட ஆயுளுக்குக் காரணமாயுள்ளவைகள் எவை? நல்ல ஆகாரம், சுகாதாரமான குடியிருப்பு வசதி, பரிசுத்தமும் ஆரோக்கியத்துக்கு ஏற்றதுமான துணிமணிகள், சுகாதார முறைகளைப் பற்றிய உணர்வு இவற்றைக் கவனிக்க போதியளவு பொருளாதார வசதி, தாய்மார்கட்கு பிரசவ காலங்களில் வசதிகள், நோய்க்காலங்களில் சிகிச்சை பெறுவதற்குரிய வசதிகள், கொள்ளை நோய்களைத் தடுப்பதற்கு எடுத்துக்கொள்ளும் எச்சரிக்கை முறைகள், ஆகியவற்றால் ஆயுட்காலம் அதிகமாகும். இவைகளில் பெரும்பாலானவை அந்த அந்தத் தேசத்தையும் அதனுடைய மக்களையும் பொறுத்தவை. போதுமான அளவிலாவது சரியான சுதந்தரம் ஒரு தேசத்திற்கு இல்லாமற்போய்விட்டால், அதனுடைய பொருளாதார நிலை திருப்திகரமாயிருக்கவே முடியாது. ஒரு தேசத்தின் மக்களுக்குக் கல்வியறிவும் கலையுணர்ச்சியும் இல்லாவிடில் அவர்களுக்குச் சுகாதார விதிகளைப்பற்றின அறிவு ஏற்பட முடியாது. தேச முழுதும் கல்வியறிவு பரவ வேண்டுமாயின் அந்தத் தேசம் விடுதலை பெற்றிருக்க வேண்டும்; அப்போதுதான் தேசத்திலுள்ள தார்க்குறித்தன்மை நீங்கும்.

அடிமைத் தேசங்களை ஆளுகிற ஏகாதிபத்திய அரசுகள் நேரடியாகவும் மறைமுகமாகவும் முயற்சி செய்து, தாங்கள் ஆளுகிற தேசங்கள் என்றென்றும் பாமரத் தன்மையிலிருந்து விழிப்படைய முடியாதபடி பார்த்து வருகின்றனர்.

இம்மக்களுக்குத் தெரிந்த சிற்சில சுகாதார முறைகளையும் ஆரோக்கிய விதிகளையும்கூட இவர்களால் கடைப்பிடிக்க முடியாதபடி இவர்களுடைய தரித்திரம் பீடிக்கிறது. ஆகையால், கிராமங்கள், நகரங்கள் இவைகளின் சேர்க்கையால் ஏற்பட்ட தேசத்தின் சுகாதாரம், அந்தத் தேசத்தாரால் தேர்ந்தெடுக்கப்பெற்ற பிரதிநிதிகள் கையில் தேச வரவு செலவு நிர்வாகம் முழுதும் ஒப்படைக்கப் பட்டிருப்பதைப் பொறுத்திருக்கிறது. அதாவது பூரண அரசியல் சுதந்திரம் இன்றியமையாததாகிறது.

இப்படிச் சொல்லுவதிலிருந்து, ஒரு தேசம் பூரண சுதந்திரத்தை அடைந்து விடுமாயின் உடனே அதன் மக்களும் நீண்ட காலம் வாழ்வார்கள் என்று நாம் சொல்லவரவில்லை. ஆனால், பூரண சுயேச்சை இருந்தால், ஆயுளை வளர்ப்பதற்குரிய வசதிகளையெல்லாம் தேடிக்கொள்ளுவதற்கு அரசியல் சுதந்திரம் இடமளிக்கிறது என்பதுமட்டும் நிச்சயம். மற்றும், பூரண சுயேச்சையின்றி இவ்வசதிகள் பூராவையும் பெற்றுவிடுவதென்பது முடியாத காரியம்.

**எனவே, சுயேச்சையாயிருக்க வேண்டுமென்று நாம் ஆசைப்படுகிறோம்; ஏனெனில், நீண்டகாலம் உயிரோடிருக்கவேண்டுமென்பதும் விருப்பம்!**

நாம் சுதந்திரம் பெறவேண்டுமென்பதற்கு இன்னும் இதர காரணங்களுமுண்டு. வாஸ்தவமாகவே, சுதந்திரம் பெறவேண்டும் என்பதற்குக் காரணம் ஏதாவது தேவையா என்ன ? சுதந்திரம் ஒவ்வொரு மனிதனுக்கும் உள்ள பிறப்புரிமையாகும். அவன் சுதந்திரத்துடன் வாழ்வதற்கு விரும்புவதும் அப்படிப்பட்ட வாழ்க்கையை நடத்துவதும் இயற்கையானவை. சின்னஞ் சிறு சிசுக்கள்கூட, சதா சர்வ காலமும் தம் பெற்றோர்களின் கரங்களிலும் மடிமீதும் இருக்க விரும்புவதில்லை. தட்டுத்தடுமாறி நடக்கவும், பொத்தென்று கீழே விழவும், மீண்டும் எழுந்து விழவுமே விழைகின்றன. இப்படிக்கூறுவதிலிருந்து "ஏகாதிபத்திய அரசுகள் அடிமை மக்களுக்குப் பெற்றோர்கள் போல" என்று நாம் கூறவரவில்லை!

#### நீண்ட ஆயுளை விரும்புவதேன்?

உயிர்வாழ்வது விரும்பத்தக்கதாயின் நீண்ட ஆயுள் வாழ்வதும் விரும்பத்தக்கதுதான். துன்பம் நிறைந்த வாழ்க்கை நீண்ட ஆயுளாயிருந்தாலும் அற்ப ஆயுளாயிருந்தாலும் அது வேண்டவே வேண்டாம். துன்பத்திலிருந்து மீளுவதற்குச் சுதந்திரமென்பது அருமருந்து.

உயிர் வாழ்க்கையை விரும்பாதவர்கள், சுதந்திர வாழ்வாயிருந்தாலும் அடிமை வாழ்வாயிருந்தாலும், உயிர் வாழவே வேண்டுவதில்லை.

ஆனால் உயிர் வாழ வேண்டுமென விரும்புகிறவர்கள்,அறிந்தோ அறியாமலோ ,ஏதோ ஒன்றினைச்சாதிப்பதற்காகவே உயிரைப் பெரிதென மதித்துவருகிறார்கள். அவ்வாறு சாதிக்கவிரும்பப்படுகிற ஒன்று சித்திபெறுவதென்பது, குறைந்த ஆயுளைக் காட்டிலும் நீடித்த ஆயுளால்தான் மிகுதியும் கைகூடக் கூடும்.

---



---

### கருங்குயில் குன்றத்துக் கொலை!

சென்னை சுந்தரம் ஸ்டுடியோசார் 'கருங்குயில் குன்றத்துக் கொலை' என்ற சமூகப்படத்தைத் தயாரிக்கப் போகின்றனரெனத் தெரிகிறது.

## மதிப்புரை

Indian Problems in Malaya—மலாய் நாட்டிலுள்ள இந்தியப் பிரச்னைகள்.

விலை ரூ. 1—8—0. கிடைக்குமிடம்:— தி இண்டியன் ஆபீஸ், கோலாலம்பூர், எப். எம். எஸ்.

இது ஒரு ஆங்கில நூல். ஸ்ரீ கே. ஏ. நீலகண்ட அய்யர் இந்நூலை எழுதியிருக்கிறார்.

மலாய் தேசம் ஒரு தீபகற்பம். மத்தியில் தென் வடலாக முதுகெலும்புபோல மலைத் தொடர்ச்சி இருக்கிறது. இது மலாய் நாட்டை இரண்டு பாகங்களாய்ப் பிரிக்கிறது; ஒரு பாகம் பெரிதும் மற்றொன்று சிறிதுமாய். சின்ன பாகம் பிரிட்டிஷார் ஆதிக்கத்திலிருக்கிறது 1880ம் ஆண்டு முதல்.

மிகச் செழிப்பான பூமி. ஈயமும் ரப்பரும் மலாய்க்கு இரண்டு கண்கள் போல உள்ளவை. இங்கு இந்தியர்களும் சீனத்தவரும் ஏராளமாய்க் குடியேறி, தத்தம் நாட்டுப் பழக்க வழக்கங்களையும் கலைகளையும் புகுத்தி வருகின்றனர். சீனத்தவரைக் காட்டிலும் இந்தியர்கள் குறைவாகத்தான் இருக்கின்றனர். எனினும், திட்டமாக இந்தியர்களுடைய தொகுதி இவ்வளவு எனச் சொல்லுவதற்கில்லை, அடிக்கடி இந்தியர்கள் குடியேறியும் வெளியேறியும் வருவதால் இங்குள்ள. இந்தியர்களிற் பெரும்பாலோர் தொழிலாளர்களே. சீனத் தொழிலாளர்களுக்குள்ள வசதிகள் இந்தியர்களுக் கில்லாமல் எத்தகைய அல்லல்களுக்கு உள்ளாகுகின்றன ரென்பதை இந் நூல் மிகத் தெளிவாக விவரிக்கின்றது. பசுக்களினின்றும் பிரிக்கப்பெற்ற கன்றுகள் போல, இங்கு வசிக்கும் இந்தியர்கள் இந்தியாவின் நிலைமையைக் கூர்ந்து கவனித்து வருவதும் இவ் இந்தியத் தாய்நாடு இன்னும் தன்னாட்சி பெருதது கண்டு, அவர்கள் அன்னிய நாட்டார் படுத்தும் கொடுமைகளை யெல்லாம் சகித்து வருவதும் இந் நூலில் நன்கு எடுத்துக் காட்டப்படுகிறது. 1912-வது ஆண்டுமுதல் மலாய் நாட்டிலேயே இருந்து மிகுந்த அனுபவம் பெற்றிருப்பவராதலால் நூலாசிரியர் கூறும் விவரங்கள் பல, நாம் இதுகாறும் மலாய் நாட்டைப் பற்றிக் கொண்டுள்ள அபிப்பிராயங்களைப் பிழைபடச் செய்கின்றன.

ஆங்கில மறிந்த இந்தியர்கள் படிக்க வேண்டிய நூல்களில் இதுவுமொன்று என்பதில் தடையில்லை. ஆசிரியரின் இம் முயற்சியை நாம் மிகவும் பாராட்டுகிறோம்.

### வங்கப் புரட்சி

விலை அணா இரண்டு. கிடைக்குமிடம்:—போஸ் பிரசுராலயம், காரைக்குடி.

சென்னைக் கூவம் ரோட்டிலுள்ள லோகசக்தி ஆபீஸார் 'வங்கப் புரட்சி' எனும் இத் தமிழ் நூலை வெளியிட்டிருக்கிறார்கள். ஸ்ரீ ம. கி. திருவேங்கிடம் என்பவர் இதை எழுதியிருக்கிறார். வங்கப் பிரிவினை, கர்சான் கலக்கம், பிரிட்டிஷ் சாமான் பகிஷ்காரம், மானிக்தலை சதி, ரௌலட் சட்டம், சௌரி சௌரா, சிட்டகாங் சதி, வெள்ளைக்கார வேட்டை போன்ற பல அத்தியாயங்கள் இதில் அடங்கியுள்ளன.

இது லோகசக்தியின் 6-வது மலர்.

### 'அந்தமான்'

விலைஅணா இரண்டு. கிடைக்குமிடம்: போஸ் பிரசுராலயம், காரைக்குடி.

"புரட்சிச் சக்திகளை உறைவிடமாகக் கொண்டிருக்கிற அந்தமானைக் குறித்துத் தோழர் சௌமியேந்திரநாத் தாகூர் எழுதிய சிறு நூலின் மொழிபெயர்ப்பாகும் இச் சிறு புத்தகம்" என்று இந் நூலின் ஆசிரியர் முகவுரையிலேயே நமக்கு அறிமுகப்படுத்திவிட்டார். அந்தமான் தீவிலுள்ள அரசியல் கைதிகளின் எண்ணிக்கையைத் திட்டமாக இப்போது கூற முடியாதாயினும் ஆச்சாரியா நரேந்திரதேவ் சுமார் 5000 என்று சிறிது காலத்துக்கு முன் தெரிவித்திருந்தார். இப்போது இது குறைந்துவிட்டதென்பது உண்மையே. ஆனால், உலக விஷய மறிந்த, படித்த, விடுதலை பெறுவதையே தம் உயிர் லட்சியமாய்க்கொண்ட நம் சோதர மக்கள் அங்கு படுகிற கஷ்டங்கள் சொல்லமுடியாதன. அவர்கள் எப்படித்தான் உயிர் வாழ்கின்றனர் என்பதே ஒரு பெருத்த ஆச்சரியமாகும். ஆனால் ராயப்பேட்டை ஸ்ரீ கோபதி நாராயணசாமி செட்டியார் மட்டும் இதைச் சுவர்க்கமென்று ஓர் முறை உத்தியோக தோரணையில் அறிவித்தார். இது எவ்வளவு பெரிய முழுப் பூசணிக்காய் என்பதையும், அந்தமானிலுள்ள கைதிகளின் இடிந்துபோனஉள்ளத்தையும் இச் சிறு நூலில் ஸ்ரீ இளங்கோவன் அழகாக மொழிபெயர்த்துத் தந்துள்ளார். ரஸமான பல பகுதிகளை வாசகர்கள் இதில் காணலாம்.

இது லோகசக்தியின் 7-வது மலர்.

## உலகம்பட்டி

16-8-38 அன்று உலகம்பட்டி காங்கிரஸ் அங்கத்தினர்களின் பொதுக்கூட்டம் ஒன்று கூடி கீழ்க்கண்ட அங்கத்தினர்களைக் கொண்ட கிராமக் காங்கிரஸ் கமிட்டி யொன்று நிறுவப்பெற்றது.

தலைவர்:-திரு. ஆ. சித. முத்துராமஞ் செட்டியார், உப-தலைவர்:-திரு. பழ. சிவ. பழனியப்பா, காரியதரிசி:-திரு. எம். பி. சுப்பிரமணிய அய்யர், பொக்கிஷதார்:-பழ. சிவ. நடராஜன் செட்டியார்; மற்றும் 11 நிர்வாக அங்கத்தினர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டனர் என்று காரியதரிசி எழுதுகிறார்.

## காரைக்குடி ஜில்லா அரசியல் மகாநாடு

### கன்வீனர் வேண்டுகோள்

காரைக்குடி ஜில்லா மூன்றுவது அரசியல் மகாநாட்டின் கன்வீனர், மானாமதுரை ஸ்ரீ ஆர். ஷண்முகம் பின் வருமாறு எழுதுகிறார்:—

25-9-38 ஞாயிற்றுக்கிழமையன்று காரைக்குடி ஜில்லா 3-வது அரசியல் மகாநாடு மானாமதுரையில் நடைபெறும். இம்மகாநாட்டை உற்சாகமாகவும், சிறந்த முறையிலும் நடத்திவைப்பது நமது ஜில்லா வாசிகளின் கடமையாகும்.

எனவே, மானாமதுரைத் தாலுகாவிலுள்ள காங்கிரஸ் அங்கத்தினர்கள் அனைவரும் வரவேற்புக் கமிட்டி அங்கத்தினர்களாகச் சேர்ந்தும், பொருளுதவி செய்தும் மகாநாட்டைச் சிறப்புறச் செய்யுமாறு வேண்டுகின்றேன்.

நமது ஜில்லாவிலுள்ள காங்கிரஸ் அபிமானிகள் அனைவரும் தாராளமாகப் பொருளுதவி செய்தும், ஒத்துழைத்தும் மகாநாடு வெற்றிகரமாக நடைபெறச் செய்யுமாறு கேட்டுக்கொள்கிறேன்.

வரவேற்புக் கமிட்டி அங்கத்தினர் கட்டணம் ரூ. 2/ எனத் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. நேரிலோ, தபால் மூலமோ என்னிடம் பணஞ்செலுத்தி ரசீதுகள் பெற்றுக்கொள்ளலாம்.

## சிறந்த வைத்தியர்

சா. கணேசன்

இப்பா ருலகில் இலங்கிடு மக்காள்!
ஒப்பா ரில்லா உயர்ந்த மருத்துவர்
துதிபெற விளங்குனர் சொல்லக் கேண்மின்
கதிரவன் ஒளியும், காற்றும், ஓய்வும்,
தூயநல் உணவும், சுத்தமாம் நீரும்
தேகப் பயிற்சியும் சிறந்தநல் வைத்தியர்
ஆகப் பெறுவர் அறிவீர். அன்றியும்;
இந்தநல் வைத்தியர் எந்தப் பொழுதினும்,
தானாய் வருவர். தட்சணை வேண்டார்.
ஆனால் நீவிர் அவாவுதல் வேண்டும்.
அதனால்;
உம்முடற் பிணியும், உள்ளத் தயர்வும்
செம்முகத் தீயில் தெளித்த நீரென
மறைந்திட நீவிர் மகிழ்ச்சியுள் திளைப்பீர்.
அதனா லன்றோ ஆங்கில மொழியில்
* "நேச்சர் க்யூர்ஸ் டாக்டர் கெய்ன்ஸ்"
என்றொரு பழமொழி இயம்பப் பெறுமே.

— ஆங்கிலப் பாவின் மொழிபெயர்ப்பு.

* Nature Cures Doctor Gains.

## வேதாரண்யம்

### சீர்திருத்தக் கதர்த் திருமணம்

சென்ற 21—8—38-ந்தேதி வேதாரண்யத்திற்கு சுமார் ஒரு மைல் தூரமுள்ள முதலியார் தோப்புக் கிராமத்தில், ஸ்ரீயுத டி. அய்யப்ப முதலியார் தலைமையில் ஓர் சீர்திருத்தக் கதர்த் திருமணம் நடைபெற்றது.

முதலியார் தோப்பு வாசியும், திருத்துறைப்பூண்டி தாலுகா காங்கிரஸ் கமிட்டி மெம்பரும், தேத்தாகுடி நெய்விளக்கு காங்கிரஸ் கமிட்டி காரியதரிசியுமாகிய ஸ்ரீமான் த. இராமசாமிக்கும் நாலுவேதபதி கோவிந்தசாமிக் கவுண்டர் புதல்வி ஸ்ரீமதி வீரமுத்தம்மாளுக்கும் விவாகம் நடைபெற்றது. சுமார் 500 ஜனங்களுக்குமேல் வந்திருந்தார்கள். விவாகம் லௌகீக வைதீக சடங்குகளில்லாமலும், புரோகித மந்திரமில்லாமலும் நடந்தேறியது. கவுண்டர் வகுப்பில் நடந்த சீர்திருத்த விவாகம் இத் தாலுகாவிற்கு இதுவே முதல் ஆரம்பமாகும்.

திருமங்கிலியம் தரித்தவுடன் ஸ்ரீயுத டி. அய்யப்ப முதலியாரும், தாலுகா கமிட்டித் தலைவர் ஸ்ரீ ரெத்தின சபாபதி பிள்ளையும், மற்றும் ஸ்ரீ எஸ்.டி.டி. தம்பையா தேவரும் தம்பதிகட்கு ஆசிகூறி சிக்கன முறையைச் சிலாகித்துப் பேசினர்கள்.





# சாட்சிக்கூண்டில் கல்யாண மாப்பிள்ளை

## காரைக்குடி

### ஸ்ரீ சேம்பர்சுக்கு தேநீர் விருந்து

இன்கம்டாக்ஸ் சட்டத்தை சீர்திருத்தம் செய்ய டெல்லி அசெம்பிளியில் இந்திய கவர்ன்மெண்டார் ஒரு மசோதா கொண்டு வந்திருப்பது எல்லோருக்கும் தெரிந்த விஷயம். இம்மசோதாப்படி வெளியூரிலுள்ள ஆதாயம் முழுமைக்கும், பிரிட்டிஷ் இந்தியாவிற்கு வரவழைத்தாலும், அல்லாவிட்டாலும் வருமான வரி விதிப்பதென்று ஏற்பட்டிருக்கிறது. இவ் ஏற்பாடு நகரத்தார்களை மிகவும் பாதிக்குமென்று தெரிய வருகிறது.

இந்திய கவர்ன்மெண்டுக்கு இன்கம்டாக்ஸ் அட்வைஸரான திரு. எஸ். பி. சேம்பர்ஸ் என்பவர் இன்ஸ்பெக்ஷனுக்காக காரைக்குடிக்கு வந்திருந்தார். கல்லுக்கட்டியிலுள்ள ரிஜிஸ்டர்டு அகௌண்டன்ஸ் அண்டு ஆடிடர்ஸ் பி. என். எஸ். அய்யர் அண்டு கம்பெனியாரால் சேம்பர்ஸ் துரைக்கு தேனீர் விருந்தொன்று ஆகஸ்டுமீ 24வ அளிக்கப் பெற்றது. அவ்வமயம் சேம்பர்ஸ் துரையிடம் வெளியூர் வருமானம் முழுமைக்கும் வரி விதித்தால் நகரத்தார்களை மிகவும் பாதிக்கும் என்றும்தற்பொழுதுவரவழைத்துள்ள தொகையைக் கண்டுபிடிக்க குறிப்பு நகல் காட்டினால் போதுமானதாகவும் இருக்கிறது.ஆனால் புதுமசோதா அமுலுக்கு வந்தால் வெளிநாட்டு அசல் புஸ்தகங்களையே காட்டவேண்டியிருக்குமென்று விளக்கிக் கூறப்பட்டது. அதற்கு சேம்பர்ஸ்துரை பதிலளிக்கையில், வரி செலுத்துவோர்கள் தாங்கள் திருப்பிக் கொடுக்கவேண்டியவைகள் சரி என்பதற்குத் தக்கவாறு ருசுப்பித்தால், புத்தகங்களைக் கொண்டு வர வேண்டுமென்று இன்கம்டாக்ஸ் ஆபீசர்கள் சொல்லமாட்டார்களென்று பதில் கூறினார்.

ஷை தேநீர் விருந்தின்போழ்து மதுரை அஸிஸ்டெண்டு இன்கம்டாக்ஸ் கமிஷனர், காரைக்குடி, தேவகோட்டை இன்கம்டாக்ஸ்ஆபீசர்கள், வட ராமநாதபுரம் ஜில்லாபோர்டு தலைவர் திரு. க. வெ. சித. வெங்கடாசலம் செட்டியார், ஸ்ரீமதி பி. நா. சொ. விசாலாக்ஷி அம்மாள், காரைக்குடி இன்கம்டாக்ஸ் ஏஜண்டுகள், மற்றும் பல வரி செலுத்துவோர்களும் விஜயஞ் செய்திருந்தனர் என ஒருநிருபர் எழுதுகிறார்.

## மாங்கொம்பு

19-8-38 இரவு மாங்கொம்பு காங்கிரஸ் கமிட்டிக் காரியதரிசி ஸ்ரீகரு.ராமநாதன் இல்லத்தில் ஸ்ரீ சி. பொன்னையா பிள்ளை தலைமையில் நிர்வாகஸ்தர்களின் கூட்டம் ஒன்று நடைபெற்று கீழ்க்கண்ட தீர்மானங்கள் நிறைவேறின.

1. திருப்புத்தூர் தாலுகா நான்காவது அரசியல் மகாநாட்டிற்கு பிரதிநிதிகளாக ஸ்ரீமான்கள் பள. காளிமுத்து, பள. சின்னையா ஆகியோர் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

2. இவ்வூரில் தர்மப் பள்ளிக்கூடம் அமைத்துக்கொடுக்கும் ஸ்ரீ மு. கரு. தேனப்ப செட்டியாருக்கு 1-9-38-ல் நடைபெறவிருக்கும் தேனப்பா ஆரம்பப் பாடசாலைத் திறப்பு விழாவில் உபசாரப்பத்திரம் ஒன்று வாசித்தளிப்பதென்றும், வெள்ளிக் கப் ஒன்று ஞாபகார்த்தமாக வழங்குவதென்றும் இக்கூட்டம் தீர்மானிக்கிறது.

மற்றும் பல தீர்மானங்கள் நிறைவேறிய பின், கூட்டம் இனிது நிறைவெய்தியதென காரியதரிசி ஸ்ரீ கரு. ராமநாதன் அறிவிக்கிறார்.

## சாரதாச் சட்ட அமுல்

### கல்யாணத்தை நிறுத்த மனு

(நமது நிருபர்)

27—8—38-வ தேவகோட்டை ஜாயிண்டு மாஜிஸ்டிரேட் ஸ்ரீ எம். எஸ். சிவராமன் ஐ. சி. எஸ். முன்னிலையில் ஓர் சுவாரஸ்யமான கேஸ் நடைபெற்றது. காரைக்குடி ஸ்ரீ முத்து ராம. சொ. ராமநாதன் செட்டியார் மகள் சிவகாமிக்கும் ஷை யூர் ஸ்ரீ நாக. சி. கருத்தான் செட்டியார் என்ற முத்தையா செட்டியாரின் சுவீகார புத்திரன் நாச்சியப்பனுக்கும் 28-8-38 ஞாயிற்றுக்கிழமை காரைக்குடியில் நடக்க இருந்த விவாகம்பற்றியது அவ்வழக்கு.

பாலிய விவாக மறுப்புச் சங்கக் காரியதரிசி திரு. ராம. அழகப்பாவால் "இவ்விவாகம் சாரதாச் சட்டத்தை மீறியது என மனுப்போடப்பட்டு, அதற்கு அன்றுதினம் வாய்தா ஏற்படுத்தப்பட்டிருந்தது. மாப்பிள்ளைக்கு வயது 18 ஆகவில்லை என்பதே தாவா. 1922வரு ஜுலைமீ 31வ அந்தப் பையன் பிறந்ததாக மனுதாரரால் சர்டிபிகேட்டுத் தாக்கல் செய்யப்பட்டது.

எதிர்மனுதார் 1919வரு அக்டோபர்மீ 29வ அப்பையன் பிறந்ததாக ஓர் சர்ட்டிபிக்கட்டுத் தாக்கல் செய்தனர். எதிர்மனுதார் கூறுவது உண்மையல்ல வென்றும், கல்யாணம் செய்யப்போகின்ற பையனுக்கு மூத்த சகோதரர் ஒருவரிருந்து இலங்கையில் போய் இறந்துவிட்டாரென்றும் அந்த சர்ட்டிபிக்கட்டு இறந்தவர் பிறந்த தேதியைக் குறிப்பதாகுமென்றும், மனுதாரரால் சொல்லப்பட்டிருக்கிறது. இரண்டு தரப்பிலும் அபிடவிட்டுகள் பல தாக்கல் செய்யப்பட்டன. கோர்ட்டில் ஏராளமான கூட்டம். மறுநாள் கல்யாணம் செய்ய இருந்த மாப்பிள்ளை வீட்டார் பெண் வீட்டார் ஆகிய இரு சாராரின் சுற்றத்தாரிற் பெரும்பாலார் கோர்ட்டிற்கு முன் வந்து கூடிவிட்டனர்.

ஜாயிண்டு மாஜிஸ்ட்ரேட் மணம் செய்யவேண்டிய பையனைக் கோர்ட்டிற்குக் கொண்டுவர உத்தரவிட்டார். அதன்படி மணமகனைக் கோர்ட்டில் கொண்டுவந்து சாக்ஷிக் கூண்டில் நிறுத்தப்பட்டது. அந்தச் சிறுவனைப் பார்த்ததும் இந்தப்பையனுக்கு 15 வயதுக்குமேல் இராதே என்று மாஜிஸ்ட்ரேட் கூறினார். பிறகு டாக்டர் மூலம் பரிசோதிக்க அனுமதி கோரப்பட்டது. தேவகோட்டையிலுள்ள கவர்ன்மெண்ட் ஆஸ்பத்திரி டாக்டர் வரவழைக்கப்பட்டார். டாக்டர் பலவிதமான சோதனைகளும் செய்துபார்த்து பையனுக்கு வயது 18 இருக்கும் என அபிப்பிராயப்பட்டார். மனுதாரின் வக்கீல், நிச்சயமாக 18 ஆகிவிட்டதென்று உங்களால் சொல்ல முடியுமா? என்று கேட்ட கேள்விக்கு அப்படி நிச்சயமாகச் சொல்லமுடியாதென்று டாக்டர் பதில் சொன்னார். டாக்டர் அபிப்பிராயத்தை வைத்துக்கொண்டு ஜாயிண்டு மாஜிஸ்ட்ரேட் கல்யாணத்துக்குத் தடை விதிக்க மறுத்து விட்டார். மனுதார் பிராஸிக்யூஷன் செய்து சட்ட விரோதமென்பதை ருசுப்படுத்த உரிமையுண்டு என மாஜிஸ்ட்ரேட் கூறினார்.

இவ்வழக்குப் பெரிய பரபரப்பை உண்டாக்கியிருக்கிறது. கல்யாணம் 28—8—38 தேதி நடைபெற்றுவிட்டது. சங்கக் காரியதரிசியால் மேல் நடவடிக்கை எடுத்துக் கொள்ளப்படுமெனத் தெரிகிறது. இந்தக் கல்யாணத்தில் நடவடிக்கை யெடுக்க வேண்டியநிலையில் சம்பந்தப்பட்டவர்கள்பின் வருபவர்கள் என்று தெரிகிறது.

(1) பெண்ணின் தகப்பனார் திரு. முத்து. ராம. சொ. ராமநாதன் செட்டியார்.

(2) மாப்பிள்ளையின் தாயார் ஸ்ரீமதி நாகம்மை ஆச்சி.

(3) பெண் வீட்டார் சார்பாகக் கல்யாண அழைப்பில் கையெழுத்திட்ட திரு. முத்து. ராம. சொ. சொக்கலிங்கம் செட்டியார்.

(4) மாப்பிள்ளையின்சார்பாகக் கல்யாண உடன்படிக்கையில் (இசைகுடிமானம்) கையெழுத்திட்ட திரு. பஞ்சநதம் செட்டியார்.

(5) தாலிகட்டிய திரு. சா. நா. ராம. நா. நாராயணன் செட்டியார்.

(6) புரோகிதம் செய்த வெ. சு. கிருஷ்ணய்யர்.

(7) ஷை எக்ஞம் ஐயர்.

## முறையூரில் காங்கிரஸ் கூட்டம்

காந்தி வாசக சாலையின் சார்பில் அண்மையில் கட்டி முடிக்கப் பெற்றுள்ள அழகு வள்ளி ஹாலில் 24-8-38 அன்று திரு. சாமியாடி பெரியணன் அம்பலகாரர் தலைமையில் ஒரு காங்கிரஸ் கூட்டம் நடைபெற்றது. அவ்வமயம் காரைக்குடி ஜில்லாக்காங்கிரஸ் பிரசாரகர் திரு. கே. கிட்டு ஐயர் காங்கிரஸ் நிர்மாணத் திட்டங்களைப் பற்றி விளக்கிக் கூறிய பின்னர் எல்லோரும் காங்கிரஸ் அங்கத்தினர்களாகச் சேரும்படி கேட்டுக்கொண்டார். தலைவரின் முடிவுரைக்குப் பின்னர் கூட்டம் இனிது கலைந்தது.



## அய்யலூர் ரயில்விபத்துச் செய்திகள்

திருச்சி-மதுரை ரெயில்வே பிரிவில் 20-8-38 இரவு திருச்சியினின்று புறப்பட்ட 11 நெ. செங்கோட்டை பாசஞ்சர் ரெயில் வண்டி கோர விபத்துக்குள்ளான விபரம் நமது வாசகர்கள் அறிவர். இது சம்பந்தமாக ரெயில்வே அதிகாரிகளும் விளம்பர மந்திரி கனம் ராமநாதனும் 25-8-38ல் ஸ்தலத்திற்குச் சென்று விசாரணை செய்துள்ளனர். பாசஞ்சர்களின் நேரான போக்கு வரத்துகள் 25-8-38 காலை 9-50 மணி முதல் ஆரம்பமாகி விபத்திற்குள்ளான பாதை சீர்பட்டுவிட்டது. மதுரை ஆஸ்பத்திரியில் விபத்துக்குள்ளானவர்களின் நிலைமையைப்பார்த்து விளம்பர மந்திரி மிகப் பரிதாபப்பட்டார். அய்யலூரில் நடைபெற்ற விசாரணையில் கிராம வாசிகள் சாட்சியம் கூறுகையில், தங்களிற் சிலர் ரயில்வேப் பாதை உடைப் பெடுத்திருந்ததைக் கண்டு வருந்தியதாகவும், ரயில் வந்தபொழுது விபத்தைத் தடுக்க அரிக்கன் லாந்தரை உயரமாகத் தூக்கி கையைத் தூக்கி வண்டியை மேலே விட வேண்டாமென்று 'அபாயம், அபாயம்; வண்டியை நிறுத்துங்கள்' என்று உரக்கக் கூச்சலிட்டதாகவும் ஆனால் ரயில் நிற்கவில்லை என்றும் மிக வருத்தத்துடன் கூறினர்.

என்றும் பார்த்திராதபடி அபார வெள்ளம் வந்ததே விபத்துக்குக் காரணமென்றும் சிலர் கருதுகின்றனர். பிரஸ்தாப ரயில் மார்க்கம் 1-9-1875 அன்று போக்குவரத்திற்காகத் திறக்கப்பெற்றது. விபத்தான இடத்தில் புதிய பாலம் கட்டலாமென எதிர்பார்க்கப்படுகிறது.

அய்யலூர் ஸ்பெஷல் முகாமில் ரயில் விபத்து சம்பந்தமாக ஜுரார விசாரணை நடைபெற்றுவருகிறது. மேல் விசாரணை மீண்டும் 1—9—38 முதல் ஆரம்பமாகும். திடீரென மழைபெய்ததே விபத்துக்குக் காரணம் எனக் கருதப்பட்டாலும், விளக்குகளை அனுசரித்தே டிரைவர்கள் நடக்கவேண்டியது மிக முக்கியமல்லவா, விபத்தேற்பட்டது உடைப்புக்கு முன்பா பின்பா என்ற கேள்விகள் விசாரணையின்போது கேட்கப்பட்டன. துரதிர்ஷ்டவசமாக சம்பவித்துள்ள இவ்விபத்து அபார வெள்ளத்தின் காரணமே என்றும், மிக வருந்துவதாகவும் ரயில்வே சீப் கமர்ஷியல் சூப்பிரண்டெண்டு ஓர் அறிக்கை விடுத்துள்ளார்.

## உள்ளூர் சினிமாக்கள்

**ஸ்ரீ ராமவிலாசம் சினிமா பாலேஸில்:-** கோகிலகான சுப்புலட்சுமி நடிக்கும் "சேவாஸதனம்" என்ற தமிழ்ப் படம் 4-வது வாரம்.

**நடராஜா டாக்கீஸில்:-** "தென்னாலி ராமன்" என்ற தமிழ்ப் படம் இரண்டாவது வாரம்.

**ஸ்ரீ கிருஷ்ணா டாக்கீஸில்:-** "சிந்தாமணி" தமிழ்ப்படம் நடைபெறுகின்றது.

**நியூ சினிமாவில்:-** "பூர்ணச் சந்திரா" என்ற தமிழ்ப் படம் நடைபெறுகின்றது.

## கால நிலை

காரைக்குடியில் நேற்றைய சீதோஷ்ணம்:— 93·F.

# ஊழியன்

பொங்குபுகழ்ப் பாரதத்தாய் பொருந்தமணி முடிபுனைந்து புலவர் போற்றச்
சிங்கஅணை மீதிருந்து தனியரசு செலுத்தியுயர் செங்கோல் தாங்கி
எங்குமொளி வீசஅறம் யாவுநனி வளர்ந்தோங்க இடோன் றில்லா
எங்கள்தமிழ் இனியநறும் மணம்மலர ஊழியமே ஏற்றிட் டேனல்

வெகுதானிய-ஆஸ் ஆவணி-மீ 16௳ (1—9—38) வியாழன்

## டாக்டர் பேச்சையே நம்பித் தீரவேண்டுமா?

சென்ற சனிக்கிழமை தேவகோட்டை ஜாயிண்ட் மாஜிஸ்ட்ரேட் கோர்ட்டில் இப்பகுதிக்குப் புதுமையான ஒரு வழக்கு நடைபெற்றது. அதுபற்றிய நிகழ்ச்சி வேறு பக்கத்தில் வெளியிடப்பட்டிருக்கிறது. சாரதாச் சட்டத்திற்கு மாறாக நடைபெறவிருந்த ஒரு கல்யாணத்தைத் தடுக்கவேண்டும் என்று கொடுக்கப்பெற்ற ஒரு மனுவின்மீது நடந்த விசாரணையே அது. சாரதாச் சட்டத்தைப்பற்றி நாம் சென்றவாரம் தலையங்கம் எழுதியிருப்பதால் இங்கு அதை விளக்க வேண்டுவதில்லை. சாரதாச் சட்டத்துக்கு முரண்பட்ட மணங்கட்குச் சட்டரீதியான நடவடிக்கை யெடுக்கும் நோக்கத்தோடு காரைக்குடியில் சங்கம் ஒன்று காணப்பட்டிருப்பதைப் பலர் அறிந்திருக்கலாம். அச்சங்கத்தின் காரியதரிசியே இவ்வழக்கைத் தொடர்ந்தவர்.

"மாப்பிள்ளைக்குச் சாரதாச் சட்டப்படி மணம் செய்ய வயது போதாது; ஆதலால் சட்டப்படி தடை விதிக்கவேண்டும்" என்பதே காரியதரிசியின் மனு. அதற்குவேண்டிய ஆதரவுகளையும் காரியதரிசி கோர்ட்டில் தாக்கல் செய்திருக்கிறார். எதிரிகள் மாப்பிள்ளைக்கு வயது நிரம்பிவிட்டதென்று கூறிச் சில தஸ்தாவேசுகள் சமர்ப்பித்திருக்கின்றனர். கல்யாண மாப்பிள்ளையின் வயதைக்காட்டும் பிறப்புப் பதிவுக்குக் காரைக்குடி நகரசபையில் வாங்கப்பெற்ற சர்ட்டிபிக்கெட் காரியதரிசியால் ஒன்றும், கல்யாணம் நடத்துவோரால் ஒன்றும் கோர்ட்டில் ஆஜர்ப்படுத்தப்பட்டிருக்கின்றன. காரியதரிசியின் சர்ட்டிபிக்கேட் வயதாகவில்லையென்று காட்டுகிறது. மற்றவருடையது வயதானதாக இருக்கிறது. இதில்தான் மர்மம் இருக்கின்றது. ஒருவரின் மக்களாகப் பதிவுசெய்யப்பெற்ற இரண்டு பேரின் சர்ட்டிபிக்கேட்கள் அவ் இரண்டும். ஒருமகன் இறந்து போனார்; மற்றொருவர் உயிருடன் இருக்கின்றார். இரண்டில் ஒன்று செத்துப்போனவரின் சர்ட்டிபிக்கேட். செத்துப்போன மூத்தமகனின் பிறந்த தேதியைக் காட்டி, இருக்கின்ற இளைய மகனுக்குக் கல்யாணம் நடத்துவதாகக் காரியதரிசி மனுவில் கூறியிருக்கிறார். கல்யாணம் மறுநாளாக இருந்தமையால் அவகாசமின்மை காரணமாகவே அவைகளெல்லாம் விசாரிக்கப்படவில்லைப்போலும்.

மாப்பிள்ளையை நேரில் பார்க்கவேண்டும் என்று மாஜிஸ்ட்ரேட் கூறினார். வேறு வகையின்றிக் கல்யாண மாப்பிள்ளை கோர்ட்டில் கொண்டுவந்து நிறுத்தப் பெற்றது. பார்த்ததும் மாஜிஸ்ட்ரேட் திடுக்கிட்டு "ஓ, இந்தப் பையனா! பதினைந்து வயதுக்குமேல் இராதே" என்று கூறினாராம். பிறகு ஒரு டாக்டர் வரவழைக்கப்பட்டுப் பரிசோதிக்கப்பட்டதாம். அந்த டாக்டர் பதினெட்டு வயது இருக்கும் என இயம்பி விட்டாராம். அதை ஒப்புக்கொண்டு மாஜிஸ்ட்ரேட் தடை விதிக்க மறுத்துவிட்டார். டாக்டர் சொன்ன பேச்சை நம்பி மாஜிஸ்ட்ரேட் தடை செய்ய மறுத்தது நியாயமாகுமா? பையனை நேரில்பார்த்தார் மாஜிஸ்ட்ரேட். வயது நிரம்பவில்லையென்றே உணர்ந்தார் எனத் தெரிகின்றது. இந்நிலையில் உண்மைக்குப் புறம்பான எந்தச் சாட்சியத்தையும் தூக்கி வீசி விட்டு-சட்டத்தைப் பாதுகாக்கும் ஒரே நோக்கொடு-உள் நுழைந்து வேலை செய்வோர்க்கு இடங்கொடாமல்-மணத்தைத் தடுத்தே இருக்கவேண்டும் கோர்ட்டார். இரண்டு தரப்பும் விசாரிக்கப்பட்டு வயது நிரூபிக்கப்படுமானால் பிறகே அநுமதிப்பது பொருந்தும். அவ்வாறே செய்வார் தேவகோட்டை ஜாயிண்ட் மாஜிஸ்ட்ரேட் திரு. சிவராமன் ஐ. சி. எஸ்., என்று அறிஞர் பலரும் கருதினதாகத் தெரிகிறது. ஆனால், தீர்ப்பு வேறு விதமாகிவிட்டது. தாம் மாறுபட உணர்ந்துங்கூட, ஓர் அரசாங்க வைத்தியசாலை டாக்டர் சாட்சியத்துக்கு விரோதமாக முடிவு சொல்லக்கூடாது என்று நினைத்துவிட்டதாகத் தோன்றுகிறது.

டாக்டர் பல வகையினர். அவைகளைப்பற்றி விரித்துக் கூறாமலே எல்லோரும் அறிவர். எல்லாவற்றிலும் டாக்டர்களையே நம்பித் தீர்வதென்பதில் ஆபத்து நிறைய இருக்கின்றது. டாக்டரைப்பற்றி ஒரு சுவைமிக்க கதை சொல்வதுண்டு. வைத்தியசாலையிலிருந்த நோயாளி ஒருவரைச் சில ஆட்கள் வந்து தூக்கினர். 'ஏனையா என்னைத் தூக்குகிறீர்கள்' என்று கேட்டார் நோயாளி. 'உம்மைக் கொண்டுபோய்ப் பிணங்கள் போடும் அறையில் போடப்போகிறோம்' என்று சொல்லினர் அவர். 'உயிருடனிருக்கும் என்னை ஏன் அங்குப் போடவேண்டும்' என்றார் நோயாளி. 'நீர் செத்துப்போய் விட்டீர்; ஆதலால் உம்மை அங்கு சேர்க்கவேண்டும்' என்று மொழிந்தார் டாக்டர் என்றனர். 'நான்தான் உயிருடன் இருக்கிறேனே; நீங்கள் பார்க்கவில்லையா?' என்றார் அவர். 'அது நடக்காது; டாக்டரைவிட நீர் பெரியவரா? 2000 ரூபாய் சம்பளம் வாங்கும் டாக்டர் நீர் செத்துப்போய்விட்டதாகச் சொல்கிறார்; அவர் சொல்வதைத்தான் நாங்கள் நம்புவோம்; வாயை மூடும்' என்று சொல்லித் தூக்கிக் கொண்டு போய்விட்டதாக ஒரு கதை உண்டு. எனவே, எவர் கூற்றையும் குறிப்பிட்ட ஓர் அளவிற்கு மேல் மதித்தல் பொருந்துவதாகாது.

கல்யாணத்தைத் தடைசெய்ய விடாமல் நடாத்தி வெற்றியடைந்துவிட்டோம் எனச் சம்பந்தப்பட்ட யாராவது நினைப்பார்களானால் அது அறியாமை. கல்யாணம் தடுக்கப்படவில்லையானாலும் கல்யாணத்தை நடாத்தியவர் அது சட்டப்படி குற்றம் என்று ஒரு வருஷத்துக்குள் எப்பொழுது ஏற்பட்டாலும் தண்டனை பெறவேண்டியவரே. இக்கல்யாண விஷயத்தில் மேல் நடவடிக்கை தொடங்கப்படும் என்றே அறிகிறோம். தவிர, உண்மைக்குப் புறம்பான நிகழ்ச்சிகள் கண்டுபிடிக்கப்பட்டுத் தக்கவாறு தண்டிக்கப்படவேண்டுவது அவசியமேயன்றோ?

சாரதாச் சட்டம் பெயரளவிலேயே இருக்கிறது. அச்சட்டம் அமுல் நடத்தப்படுவது ஆங்காங்குள்ள சீர்திருத்தக்காரரைப் பொறுத்ததாகவே இருக்கின்றது. இப்பகுதியில் அதுதேடுவாரின்றிக் கிடந்தது. சாரதாச் சட்டத்தை மீறி இப்பகுதியில் நடந்த கல்யாணங்கள் எண்ணற்றன. உண்மை நோக்கத்தோடு அவற்றைத் தடுக்கும் முயற்சியை இங்கு இதுவரை யாரும் மேற்கொள்ளவில்லை. சில இடங்களில் மணம் செய்வோரை 'மனுப் போடுவேன்' எனப் பயமுறுத்திச் சிலர் பணம் பெற்றுப் போனதாகத் தெரிகிறது. சமீபத்தில் ஒரு வக்கீல் கூட ஒரு கல்யாணஞ் செய்தவரிடம் ரூபாய் ஐநூறு பிடுங்கிக் கொண்டதாகச் சொல்லப்படுகிறது. இம்முறையில் பணங் கவரும் கள்வர்கள் கீழ்மைச் செயல் ஒழியவேண்டும். அதற்குக் காரணமாய கல்யாணங்களை எந்த விதமான விருப்பு வெறுப்புமில்லாத பொது நோக்கத்தோடு பார்த்து உண்மையில் சாரதாச் சட்டத்துக்கு விரோதமாக நடைபெறாதபடி செய்தல் வேண்டும். இஃதோர் சிறந்த பணி. இப்பணியில் செல்வோர் பலராலும் தூற்றப்படுவது இயற்கை. அதைப் பொருட்படுத்தாத சிலர் இதற்கு ஒரு சங்கம் கண்டிருக்கின்றனர். அச்சங்கத்தின் காரியதரிசி அன்பர் ராம. அழகப்பனார். நேர்மை ஒன்றையே குறிக்கோளாகக் கொண்டவரும் எவரையும் எதையும் பொருட்படுத்தாத இயல்பினருமான அன்பர் அழகப்பரை எவரும் கலக்கிவிடமுடியாது.

அன்று கோர்ட்டில் யாரோ ஒரு வக்கீல் "நிறையப் பணம் கேட்டார்கள்; கிடையாதென்று சொன்னமையினாலே சிரமந்தருகிறார்கள்" என்று சொன்னாராம்! அப்படிக் கூறியது உண்மையாக இருக்குமானால் அந்தவிடக் கீழான கயமைத்தனம் வேறொன்று இருக்கமுடியாது. தவறான முறையில் வரும் பணம் எவ்வளவானாலும் அவற்றை மிதித்துத் தள்ளும் பெருமைவாய்ந்தவர் அன்பர் அழகப்பனார் என்பதைக் காரைக்குடி நகரம் நன்கு அறியும். அவர் விஷயத்தில் எவனாவது உளறுவானானால் அவன் கீழ்மகன் என்பதைத் தவிர வேறில்லை. இச்சங்கத்திற்கு அவர் காரியதரிசியாக அமைந்தது ஓர் சிறப்பேயாகும். மசோதாக் கொணர்ந்த சாரதாவின் நோக்கத்தை இப்பகுதியில் ஈடேற்றிவைப்பதில் அன்பர் அழகப்பர் பெரிதும் சிரத்தை யெடுத்துக்கொண்டிருக்கிறார். வீணாகச் சட்டத்தை மீறித் தொல்லையில் எவரும் மாட்டிக்கொள்ளவேண்டாம் என எச்சரிக்க விரும்புகிறோம்.

## இடி முழக்கம்

### திருவாங்கூர்த் திருத்தாண்டவம்

ஹரிஜனங்களுக்கு ஆலயப் பிரவேச உரிமையை வழங்கிய அதே திருவாங்கூர் இப்போது தடியடித் தாண்டவம் புரியப்பார்க்கிறது. திருவாங்கூர் சமஸ்தானத்திலுள்ள காங்கிரஸ்மீது திருவாங்கூர்த் தர்பாருக்கு அளவில்லாக் கோபம். எனவே, தடியடித் தாண்டவம் புரிவதென்று தர்பார் கச்சை கட்டி நிற்கின்றது. பிரிட்டிஷ் இந்தியாவிலுள்ள கிரிமினல் திருத்தச் சட்டங்களில் முக்கியமான பகுதிகளைக் கொண்ட ஓர் பிரகடனத்தைத் திருவாங்கூர் மகாராஜா ஆகஸ்ட் 25ல் வெளியிட்டிருக்கிறார். தடையுத்திரவுகளை சமஸ்தானக் காங்கிரஸ் மறுநாள் மீறிவிடுமென்று நம்பி, மீறுவோரைத் தண்டிப்பதற்காகவே இப் பிரகடனமும் பிற அவசரச் சட்டங்களும் பிறந்துள்ளன. பொறுப்பாட்சியை நிறுவவேண்டு மென்கிற நோக்கம் சமஸ்தான காங்கிரசுக்கு உண்டென்பது உண்மை. ஆனால், இந் நோக்கத்தை நிறைவேற்ற இதுகால் சட்ட



மறுப்புப் போரைத் துவக்கவேண்டுமென அது எள்ளத்தனையும் எண்ணவில்லை. எனினும் ஒரு ஸ்தாபனம் சாதாரணமாய் நடைபெற வேண்டுவதற்குரிய அற்ப உரிமைகள்கூட இல்லாதுபோய்விடுமாயின், ஸ்தாபனம் நடைபெறுவதெங்ஙனம்? இந்த அடிப்படையான காரணத்தைமுன்னிட்டுத் திருவாங்கூரில் சுதந்திரப் போர் தொடங்கியாய்விட்டது. சமஸ்தான காங்கிரஸ் ஏற்பட்டு முதற் கூட்டம் ஆரம்பமாகு முன்பே தடையுத்திரவு ஏற்பட்டது. அது ஓய்ந்தபின் மீண்டும் அவ் உத்திரவைப் பிறப்பித்து, பிரகடனத்தையும் பிரசவித்து, இப்போரை விலைக்கு வாங்கியிருக்கின்றனர் திருவாங்கூர்ச் சர்க்கார். இதில் இன்னோர் வேடிக்கை யாதெனில், சமஸ்தான காங்கிரசுக்கு எதிராகவுள்ள ஸ்தாபனங்கள் மட்டும் தாராளமாகப் பிரசாரம்புரிய உரிமை வழங்கியமையே. எவ்வாற்றானும் தர்பார் தொடுத்துள்ள இப்போரில் சமர் புரிவதே சரியென்று சமஸ்தானக் காங்கிரஸ் முடிவு செய்து, சட்டமறுப்புப் போரை நடத்தி வருகின்றது. பெண் பேச்சு கேட்ட பேதை வெல்லிங்டன் பிரபு இப்படித்தான் வாளாயிருந்த காங்கிரஸைத் தட்டியெழுப்பி, சட்டமறுப்புப் போரை வளர்த்து லட்சக்கணக்கான இந்தியர்களுடைய பர்வத்தையெல்லாம் கொட்டி, வெற்றி பெற்றவர்போல் கெக்கரித்துக் கொண்டே இறுதியில் இங்கிலாந்து சென்றார். திரும்பிப் பார்த்ததும் இந்தியக் காங்கிரஸ் இமயமலையளவு மீண்டும் வளர்ந்திருந்ததைக் கண்டார். இதேபோல், வில்லிங்டன் பிரபுவின் சலுகையிலே திளைத்த சர். ஸி. பி. யின் திவான் காலத்திலே, இச் சட்டமறுப்புப் போரைக் காண்கிறோம். முடிவைப்பற்றி எவருக்கும் சந்தேகமில்லை. ஆனால், ஸ்ரீ. பத்மநாப ஸ்வாமி சந்நிதானத்திலே இத்திருத் தடியடித் தாண்டவம் நடைபெறவேண்டியது அவசியந்தானா என்பதை சர். ஸி. பி. சொல்லட்டும். மற்றும், தலைக்குமேல் ஊசலாடும் சமஷ்டிக்கும் இத் திருத்தாண்டவத்துக்கும் சம்பந்தமுண்டா என்பதையும் விளக்கட்டும்.

### சத்யாக்ரகமா சில்லரைச் சேட்டையா?

மத்திய மாகாண மந்திரி சபையில் ஒரு ஹரிஜன மந்திரியை நியமிக்க வேண்டுமென்று, வடக்கே சில ஹரிஜனங்கள் மகாத்மாவின் குடிசையில் 'சத்தியாக்ரகம்' செய்கிறார்கள். 'சத்தியாக்ரக' முறையைச் செவ்வனே நடத்துபவர்கள்போலவும், இவர்களுடைய முறையைப் பிறர் குறைகூற இடமளிக்கக்கூடாதென எண்ணியவர்கள் போலவும் 'உண்ணாவிரத'த் திட்டத்தையும் இவர்கள் வைத்துக் கொண்டிருக்கிறார்கள். இவர்கள் கையாளுகிற 'உண்ணாவிரத' முறை ஸ்டாலின் ஜகதீசனுடையதைப்போல இல்லாவிடினும், முறைபோட்டுக் கொண்டு இரண்டு நாளைக்கொரு கூட்டமென மாறி மாறி 'உண்ணாவிரதம்' இருப்பதென்று முடிவு செய்துள்ளனர். எனவே, இவர்களுடைய 'உண்ணாவிரத'த்தைக் கண்டு எவரும் இரங்கவேண்டுவதற் கிடமில்லை! இரண்டாவதாக, மகாத்மா இன்று விடுகிற ஒவ்வொரு மூச்சும் ஹரிஜன முன்னேற்றத்துக் குதவுகின்றதென்பதை ஓராது—மிக மிகக் கீழே இழிந்த நிலையில் கிடந்த ஹரிஜனங்களின் மத உரிமை பறிபோவது கண்டு துடிதுடித்து உண்ணாவிரதமிருந்து, தூக்கம் விசாரிக்கச் சென்றிருந்த மந்திரி மக்டொனால்டை விரைந்து வந்து தனித் தொகுதியைப் பொதுத் தொகுதியெனத் திருத்தியமைக்கச் செய்த மகான் மகாத்மா காந்தியடிகள் குடிசையில்-இன்று சில ஹரிஜனங்கள் விளையாட்டு புரிவது மகாத் தீய காரியம். இலவம் பஞ்சை யொத்த தூய்மையான வெள்ளை யுள்ளத்தையுடைய அடிகளுக்கு இதுபோன்ற அடாத காரியங்களால் அதிர்ச்சி விளையும். முப்பத்தாறு கோடி மக்களின் நலங்கோரி வாழும் உத்தமக் காந்தியடிகள் மனம் துன்புறுத்தப்பட்டால், அது முப்பத்தாறு கோடி மக்களின் நலத்தையும் உலுக்கும். எவ்வாறிருந்தாலும் சாந்தமூர்த்தி காந்தியடிகள் சமாளித்துக் கொள்ளுவாரென்பதில் தடையேயில்லை. எனினும் நம் ஏழை மனம் குழம்புகிறது; எவரே இதைச் சகிப்பர்?

### பர்மிய நிலை

அண்மையில் நடந்த பர்மாக் கலகத்தால் ஏற்பட்ட உயிர்ச்சேத விபரத்தை பர்மிய சர்க்கார் உத்தியோகத் தோரணையில் வெளியிட்டிருக்கிறார்கள். பத்தாண்டுகள் பூர்த்தி பெறுவதற்குள் இரண்டாம் முறையாக இவ் உயிர்ச்சேதம் விளைந்திருக்கிறதென்பதை அதிகாரிகள் மறந்துவிடக் கூடாது. இக்கலகங்கள் விட்டுவிட்டு நிகழ்ந்து கொண்டிருக்கின்றன. இவற்றைக் காணும் சில அரசியல் வாதிகள், பர்மாவை ஆங்கிலேயர் ஒரு 'காலனி'யாக ஆக்கிவிட அவாவுகிறார்களென்றும், இதுபற்றியே இந்தியர் மீது பர்மியர் ஏவப்படுகின்றனரெனவும், இதற்கேற்ப அவ்வப்போது ஓர் துரதிர்ஷ்டமான சம்பவத்தைச் சுட்டிக்காட்டி காரணமாய்க் கற்பிக்கப்படுகிறதெனவும் சொல்லுகிறார்கள். இது எவ்வளவு தூரம் உண்மையென நமக்குத் தெரியாதபோதிலும், பர்மாவை இந்தியாவினின்றும் வலுக்கட்டாயமாய்ப் பிரித்த வலிபடைத்த ஆங்கிலத்தார், பர்மிய இந்தியர்களுடைய உயிருக்கு ஆபத்து ஏற்படாதவாறு பாதுகாப்பளிக்க வேண்டியது தலையாய கடனாகும். முதன் முதலாக பர்மாவுக்கு இந்திய ஏஜண்டு நியமிக்கப்பெற்றுள்ள இவ் அரிய சந்தர்ப்பத்தாலும், கலகத்தின் காரணத்தை விசாரிக்க பர்மிய சர்க்கார் ஓர் விசாரணை நடத்த இருப்பதாலும், பர்மாக் கவர்னர் சர். ஆர்ச்சிபால்ட் கொக்ரேன் எல்லா அரசியல் கட்சியினரையும் தம்மைச் சந்திக்கும்படி அழைத்திருப்பதாலும் நிலைமை சீர்திருந்த வழி ஏற்படுத்தப்படுகிறதா என எதிர்பார்க்க வேண்டியது நமது கடமை.

## ஜில்லா கலெக்டர் மாற்றம்

### ஸ்ரீ குடுவா ஆற்காடு போகிறார்

ராமநாதபுரம் ஜில்லா கலெக்டர் திரு. வி. என். குடுவா ஐ. சி. எஸ், தென் ஆற்காடு ஜில்லா கலெக்டராகவும் மாஜிஸ்டிரேட்டாகவும் ஆக்ட் செய்ய நியமிக்கப்பட்டிருக்கிறார்.

திரு. குடுவாவுக்குப் பதிலாக, திரு. ஏ. ஆர். ஸி. வெஸ்ட் லேக் ஐ. சி. எஸ்., (தமது லீவு தீர்ந்ததும்) ராமநாதபுரம் கலெக்டராகவும் ஜில்லா மாஜிஸ்டிரேட்டாகவும்நியமிக்கப்பட்டுள்ளார்.

## காரைக்குடியில் பிரபல சங்கீதக் கச்சேரி

காரைக்குடி ஸ்ரீ. அ. மெ. அ. அண்ணாமலை செட்டியார் திருமணத்தை முன்னிட்டு 13—9—38செவ்வாய்க்கிழமை மாலை 4-மணிக்கு ஸ்ரீ செம்மங்குடி சீனு வாய்ப்பாட்டுக்கச்சேரி கும்பகோணம் ஸ்ரீ. ராஜமாணிக்கம்பிள்ளை பிடிலுடனும், பாலக்காட்டு மணி மிருதங்கத்துடனும் நடைபெறும்.

## காரைக்குடி செட்டியார்கள் நல்உரிமைச் சங்கம்

ஆகஸ்டு மீ 31௳ காலை 9-45 க்கு மகாசபைக் கூட்டம் திரு. சுப. வெ. வெங்கடாசலம் செட்டியார் தலைமையில் கூடியது. புது வருடத்திற்கு திரு. அள. கரு. அடைக்கப்ப செட்டியாரை தலைவராகவும், திரு. ஆரு.பள. சி. பல. சிதம்பரம் செட்டியாரை உபதலைவராகவும், திரு. கரு. சொ. பழனியப்ப செட்டியாரை காரியதரிசியாகவும், திரு. ஆ. மு. ஆரு. பழனியப்ப செட்டியாரை உதவிக் காரியதரிசியாகவும் தேர்ந்தெடுக்கப்பெற்று, இதர நிர்வாக சபை அங்கத்தினர்கள் தேர்ந்தெடுக்கப்பெற்றதும் கூட்டம் முடிவுற்றதென்று காரியதரிசி திரு. கரு. சொ. பழ. அறிவிக்கிறார்.

## திலகர் ஞாபக கால்பந்துக் கழகம்

இன்று (1-9-38) மாலை 5 மணிக்கு ஆனந்த மடத்திற்கருகிலுள்ள நாட்டு வைத்தியசாலைக் கட்டிடத்தில் ஸ்ரீ. ஆரு. ஆ. ராம. சொக்கலிங்கம் செட்டியார் தலைமையில் திலகர் ஞாபக கால்பந்துக் கழகத்தின் ஆரம்பக்கூட்டம் நடைபெறும்.

## கிழக்குடியில் தீ விபத்து

ராமநாதபுரஞ் ஜில்லா கீழக்குடி என்ற கிராமத்தில் சென்ற 21-8-38 அன்று தீ விபத்தால் அனேக வீடுகள் நாசமாயின வென்று தெரிகிறது. இவ்வீடுகளில் அநேகம் ஏழைகளுடையதென்றும், ரூ. 15,000 வரை நஷ்டமேற்பட்டிருக்குமென்றும் சொல்லப்படுகிறது.

## கோனுபட்டியில் கும்பாபிஷேகம்

கோனுபட்டு சிவன்கோவிலில் நிகழும் வெகுதானிய வருடம் ஆவணி மாதம் 22௳(7—9—38) புதன்கிழமை காலை 6 மணி முதல் 7¼ மணியளவில் அஷ்டபந்தன மகா கும்பாபிஷேகமும், மகாபிஷேகமும், அன்றிரவு திருவுலாக் காட்சியும், திருவாவடுதுறை டி. என். இராஜரெத்தினம் பிள்ளையின் நாதஸ்வரமும் பியாண்டு, சதுர், தேவார திருப்புகழ் கோஷ்டி, பொய்க்கால் குதிரை, வாணவேடிக்கை முதலிய வைபவங்களும் நடைபெறுமென கோனுபட்டு நகரத்தார் அறிவிக்கின்றனர்.

## ஷேர் மார்கெட் விபரம்

(எஸ். எஸ். புரோக்கர்ஸ்)

காரைக்குடி, ஆக. 31—

| பேங்குகள் | ரூ. அ. பை. |
|---|---|
| ரிசர்வ் பேங்க் | 117 0 0 |
| சென்றல் பேங்க் | 30 4 0 |
| இந்தியன் பேங்க் (பெரியது) | 114 0 0 |
| இந்தியன் பேங் (சிறியது) | 23 0 0 |
| **பலவகைகள்** | |
| பர்மா கார்ப்பொரேஷன் | 6 4 0xd |
| இந்தியன் காப்பர் | 2 6 0 |
| இந்தியன் அயர்ன் | 34 0 0cd |
| டாட்டா | 290 0 0 |
| டாட்டா டெப்பர்ட் | 1390 0 0 |
| அசோஸியேடட் சிமிண்ட் | 111 0 0 |
| பிளாண்டேஷன்ஸ் | |
| ரப்பர் | 8 d Per lb |
| **மில்கள்** | |
| கம்போடியா | 8 0 0 |
| பங்காஜா | 90 0 0 |
| காளீஸ்வரர் | 244 8 0 |
| லக்ஷ்மி | 52 8 0xd |
| வசந்தா | 97 0 0 |
| ராதாகிருஷ்ணா | 117 0 0 |

## கப்பல் செய்திகள்

### நாகபட்டினத்திலிருந்து பினாங்குக்குப் புறப்படுதல்

கப்பல்கள் நாகபட்டினத்திலிருந்து மலாய் நாட்டுக்குப் புறப்படும் விபரம் வருமாறு:—

| | |
|---|---|
| ரஜூலா | 10—9—38 |
| ரோணா | 24—9—38 |
| ரஜூலா | 8—10—38 |

### வருதல்

கப்பல்கள் மலாய்நாட்டிலிருந்து நாகபட்டினத்துக்கு வரும் தேதி வருமாறு:—

| | |
|---|---|
| ரஜூலா | 1—9—38 |
| ரோணா | 15—9—38 |
| ரஜூலா | 29—9—38 |

## ரெங்கூன் தந்தி

ஆகஸ்டு, 31—

| | |
|---|---|
| பட்டு நெல் | 95—97 |
| ரயில் நெல் | 94—96 |
| பெரியமில் ஸ்பெஷல் | 220—0—0 |
| சிறிய மில் நைசன் | 242—8—0 |
| ஸ்டோன் எக்ஸ்பூ | 247—8—0 253 |
| தயாரிலுள்ள புழுங்கல் அரிசி | 262-8-0 272-8-0 |
| மில்ச்சார் | 245—277—8—0 |

## சென்னை மார்க்கெட்

சென்னை, ஆக. 30—

| | |
|---|---|
| சவரன் மொத்தம் | 23—8—3 |
| ,, சில்லரை | 23—8—6 |
| பம்பாய் ஆலைத் தங்கம் | 35—15—0 |
| ,, தவணை | 36—0—6 |
| மூசை தோலா 1-க்கு | 35—9—0 |
| வெள்ளி (ரெடி) | 51—10—0 |
| ,, தவணை | 50—10—0 |
| ,, 1 ரூபாய் எடை | 0—8—6 |

## செய்கோன்

செய்கோன், ஆக. 26—

| | |
|---|---|
| தவணை வட்டி ஆடி-மீ | 0-4-0 |
| நெல் விலை பிக்கல் 1-க்கு | $ 5·45-லிருந்து $ 5·49 |

உண்டியல் விலை

| | |
|---|---|
| இந்தியாவுக்கு $ 100-க்கு | ரூ. 75 |
| சிங்கப்பூருக்கு ,, | $ 47 7/8 |

## சிங்கப்பூர்

சிங்கப்பூர், ஆக. 25—

| | |
|---|---|
| தவணை வட்டி ஆவணிமீ 1௳ | 0-3-6 |
| ரப்பர்விலைபவுண்டு1-க்கு | Cts. 27-5/8 |
| ஈயம் விலை பிக்கல் 1-க்கு | $ 96-25 |
| கொப்பரா காய்ந்தது | $ 3·35 |
| கொப்பரா கலப்பு | $ 3·05 |
| உண்டியல்விலை இந்தியாவுக்கு | 156-1/8 |
| ,, செய்கோனுக்கு | 205¼ |

## பினாங்கு

பினாங்கு, ஆக. 9—

| | |
|---|---|
| தவணை வட்டி | 0-4-0 |
| ரப்பர் பிக்கல் 1-க்கு | $ 35-33 |
| ஈயம் ,, ,, | $ 97-25 |
| கொப்பரா ,, | $ 3-50 |
| உண்டியல் விலை மதறாஸ் ரெங்கூன் | ரூ 155 3/8 |
| ,, மைடான் லிடர் | 103 7/8 |
| ,, செய்கோன் டாலர் | 205 5/8 |
| ,, பேங்காக் டிக்கல் | 125 1/2 |



## திருவாங்கூர் செய்திகள்

### சட்டமறுப்பு வளர்ந்த கதை

திருவாங்கூரில் கமலாதேவி கைது செய்யப்பட்டதைப்பற்றி பொது ஜனங்கள் அருவருப்படைந்தனர். திருவாங்கூர் ரயில்வே ஸ்டேஷனுக்குப் பக்கத்திலுள்ள மைதானத்தில் போலீஸ் படை தங்கியிருந்தது. நகரின் அமைதியை நிலைநாட்ட அங்கு போலீசார் நிறுத்தப்பட்டிருந்தனரெனச் சொல்லப்படுகிறது. ஆனால் அதே இடத்தில் பொதுஜனங்கள் கூட்டம் கூட ஏற்பாடு செய்திருந்தனர். அவர்களைக் கூடவிடாது தடுக்கவே அவர்கள் போலீசார்மீது கல் எறிந்தனர். சட்டமறுப்பு செய்யக்கூடாதெனத் திருவாங்கூர் கவர்ன்மெண்டார் சமஸ்தான காங்கிரஸ்வாதிகளுக்கு நிர்ப்பந்தம் ஏற்படுத்தினர்.

மேலும் திருவாங்கூர் சமஸ்தான காங்கிரஸ்,சட்டமறுப்பு ஆரம்பித்துள்ளது எனக் கருதி திருவாங்கூர் மகாராஜா சில சங்கங்களின் சட்ட வரம்பு மீறிய நடவடிக்கைகளையும், ராஜத்துவேஷமான காரியங்களையும் கண்டிப்பதற்காக மகாராஜா பிரகடனமொன்றை வெளியிட்டார்.

பொதுக் கூட்டங்கள் கூடாதெனத் திருவாங்கூர் சர்க்கார் பிறப்பித்த தடை உத்தரவை மீறிக் காங்கிரஸ் அங்கத்தினர்கள் 26-8-38ல் சட்டமறுப்பு ஆரம்பிக்கப் போவதாகத் திருவாங்கூர் காங்கிரஸ் கமிட்டிக்கு ஓர் நோட்டீஸ் வெளியிட்டது. அதன் பிரகாரம் சமஸ்தானக் காங்கிரஸ் தலைவர் திரு. தானுப்பிள்ளையும், திரு. டி. எம். வெர்கிசும் அன்று மாலை பொதுக் கூட்டங்கள் நடத்தியதற்காக ஷை இருவரும் கைது செய்யப்பட்டனர். கொல்லத்தில் ஸ்ரீமான்கள் மாத்தியூவும், நீலகண்டபிள்ளையும் கைது செய்யப்பட்டனர். கோட்டயம் ஆலப்பிழை முதலான இடங்களிலும் மற்றும் பல காங்கிரஸ் வாதிகள் மேலும் கைது செய்யப்பட்டனர்.

திருவாங்கூர் ஜில்லா மாஜிஸ்திரேட் கோர்ட்டில் ஸ்ரீமான்கள் தானு பிள்ளையும், டி. எம். வெர்கிஸும் 27-8-38 அன்று விசாரணை செய்யப்பட்டு, இருவருக்கும் ஒரு வருஷக் காவல் தண்டனையும் விதிக்கப்பட்டது.

மேலும் அதே தினத்தில் சமஸ்தான காங்கிரஸ் காரியாலயம் போலீசாரால் சோதனையிடப்பெற்று சில பொருள்களையும், பல துண்டுப் பிரசுரங்களையும் கைப் பற்றினர்.

திருவாங்கூர் ராஜ்ய நிலையைப்பற்றியும், அங்கு காங்கிரஸ் சட்ட விரோதமான ஸ்தாபனம் எனப் பகிரங்கப் படுத்தப் பட்டிருப்பதைப்பற்றியும் திருவாங்கூர் நாஷனல் காங்கிரஸ் தலைவர் திரு. கிருஷ்ண ஐயர் 26—8—38 அன்று கல்கத்தாவில் ராஷ்டிரபதி சுபாஷ் சந்திரபோஸைக் கண்டு விளக்கிக் கூறியுள்ளார்.

இதற்கிடையில் 28-8-28 அன்று திருவாங்கூர் கடற்கரையில் ஜில்லா மாஜிஸ்திரேட் பிறப்பித்த தடையுத்திரவை மீறி ஒரு கூட்டம் கூடியது. போலீசார் கூட்டத்தைக் கலைக்க முயன்றனர். ஆனால் சமஸ்தான காங்கிரசைச் சேர்ந்தவர்களிற் சிலர் கூட்டத்தை நடத்த முயன்றதால் அவர்கள் போலீஸ் லாரியில் எடுத்துச் செல்லப்பட்டு தூரமான ஒரு இடத்தில் விடப்பட்டனர். இதைப் பார்த்ததும் கூட்டத்திலிருந்த பலர் போலீஸார் மீது கல்மாறி பொழிந்தனர். அங்கிருந்த போலீஸ் அதிகாரிகளுக்கும் 35 கான்ஸ்டேபிள்களுக்கும் காயமேற்பட்டது. ஜில்லா போலீஸ் சூபரின்டெண்ட் கல்லடிபட்டு காயத்துடன் உயிர்தப்பினார். ஆனால் அவரது மோட்டார் வண்டி கொளுத்தப்பட்டு நாசமாயிற்று. போலீஸ் உதவி சூப்பரின்டெண்டு வண்டிக்கும் அதே கதிதான் ஏற்பட்டது. மொத்தத்தில் எத்தனை பேர் காயமடைந்தனர் என்ற விபரம் தெரியவில்லை.

# காரைக்குடி ஜில்லா அச்சுத்தொழிலாளர் சங்கம்

# திறப்புவிழா

(உள்ளூர் நிருபர்)

காரைக்குடி ஜில்லா அச்சுத் தொழிலாளர் சங்கத் திறப்புவிழா சென்ற திங்கட்கிழமை ஆகஸ்ட் 29ல் தாகூர் வாசகசாலைக் கட்டிடத்தில் நடைபெற்றது. திரு. ஏ. எஸ். சர்மா தலைமை வகித்தார். காரைக்குடி நகரத்திலுள்ள எல்லா அச்சுக்கூடத் தொழிலாளர்களும் வெளியூர் அச்சுத் தொழிலாளர்களுமாய் சுமார் 150 பேர்கள் வரை விஜயம் செய்திருந்தார்கள்.

இச் சங்கத்தின் பேரால் முன்னரே நடந்த பூர்வாங்கக் கூட்டத்தில் சங்க நிர்வாகிகள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

### நிர்வாகஸ்தர் விபரம்

தலைவர்: திரு. சா. கணேசன், உப தலைவர்: திரு. பி. சம்பந்தம் செட்டியார், காரியதரிசி: திரு. டி. பி. கோவிந்தசாமிராவ், உதவிக்காரியதரிசி: திரு. டி. எஸ். சிங்காரவேலு, பொக்கிஷதார்: டி. என். நீலகண்டராவ், கமிட்டி அங்கத்தினர்கள்: திருவாளர்கள் டி. கே. ரகுபதிராவ், எஸ். சக்கரபாணி நாயுடு, டி. பாலகிருஷ்ண ராஜு, எஸ். சுப்பராமன், முத்துவேல், சேஷாசல நாயுடு, டி. பி. நாராயணசாமி ராவ், எம். ராமனுதன், டி. எம். மாணிக்கம் பிள்ளை, எஸ். கருப்பையா சேர்வை, வி. அப்பாவு, சுப்பா நாயுடு, ஹரிராம் நாயுடு, சத்தியவாசகம் பிள்ளை, கோவிந்தசாமி பிள்ளை.

### விழா விபரம்

சங்கத் தலைவராகிய ஸ்ரீ. சா. கணேசன், ஸ்ரீ ஏ. எஸ். சர்மாவை சங்கத்தைத் திறந்துவைக்குமாறு கேட்டுக்கொண்டு பேசுகையில், "அச்சுத் தொழிலாளர்கள் உலகத்தின் ஜீவநாடியைப் போன்றவர்கள். எந்தக் கலைஞனாலும் ஆத்ம ஞானியாலும் ஏற்படாத அளவு, அச்சுத் தொழிலாளரால் உலகினருக்கு அறிவு விருத்தியாகிவருகிறது. மாணவர்களுக்கு எழுத்தறிவைப் புகட்டும் ஆசிரியர்களைப்போல, ஓரளவு அச்சுத்தொழிலாளராகிய நீங்களும் எழுத்தறிவுபுகட்டும் ஆசிரியர்களைப்போல, பங்கெடுத்துக் கொள்ளுகிறீர்கள். இத்தொழிலை நீங்கள் வளர்த்து நாட்டையும் சமூகத்தையும் முற்போக்கடையச் செய்வீர்களென நம்புகிறேன்"

என்று குறிப்பிட்டார்.

சங்கக் காரியதரிசி சங்கத்தின் தலைவருக்கும் திறப்பு விழாத் தலைவருக்கும் மலர் மாலைகள் சூட்டினார்.

திறப்பு விழாவை நடத்திய தலைவர் திரு. சர்மா தமது பிரசங்கத்தில் குறிப்பிட்டதாவது:

"காரைக்குடியில் பல சங்கங்கள் உள. எனினும் அச்சுத் தொழிலாளர்களின் நலன்களை அபிவிருத்தி செய்துகொள்ளுவதற்காக இது ஏற்பட்டிருப்பதால் இது அனாவசியமானதன்று. வேலை நிறுத்தத்திற் குறிய சந்தர்ப்பத்தைக் குறிப்பிடுவதற்காகத்தான் தொழிலாளர் சங்கங்களை நிறுவப்படுகின்றனவென்று சிலர் சந்தேகிப்பர். இச் சந்தேகத்தை நிவர்த்திப்பது நமது கடமையும் பொறுப்புமாகும். வேலை நிறுத்தம் என்பது பலஹீனமுள்ளவர்களின் ஆயுதம். இதைத் தொழிலாளர்கள் ஜாக்கிரதையாக உபயோகிக்க வேண்டும். இது கடைசியில் கையாளப்பட வேண்டிய கருவி. அச்சுத்தொழில் புனிதமான கௌரவம் வாய்ந்தது. இச் சங்கத்தில் 100 அங்கத்தினர்க்கு மேல் உளர். நீங்கள் அச்சுக் கூடத்துக்கு அச்சுக்கூடம் மாறிக் கொண்டிராமல், சங்கத்தின் ஆதரவில் அச்சுத் தொழில் கற்றுக்கொடுப்பதற்கு நீங்கள் ஏற்பாடு செய்யலாம். பல புத்தகங்களையும், சஞ்சிகைகளையும் பத்திரிகைகளையும் பார்த்து உங்கள் தொழிலை விருத்தி செய்துகொள்ளுங்கள்."

சங்கக் காரியதரிசி திரு. கோவிந்தசாமி ராவ் வந்தனங் கூற விழாவும் முடிந்தது.

## கோயம்புத்தூருக்கு ஸ்ரீ வள்ளியப்பாவின் கேடயம்

வத்தலக்குண்டில் நடைபெற்றதமிழ் மாகாண அரசியல் மகாநாட்டில் காங்கிரஸ் அங்கத்தினர்களைச் சேர்க்கும் போட்டிப் பரிசாக பூலாங்குறிச்சி திரு. வ. சொ. ராம. வள்ளியப்பா எம். எல். ஏ., யால் வழங்கப்பெற்ற கேடயம் கோயம்புத்தூர் ஜில்லாவிற்கு அளிக்கப்பட்டுள்ளது.

காரே கோட்டையில் காங்கிரஸ் கர்ஜனை

வாரப் பத்திரிகை

காரே 'கோட்டைவிட்டு' எவ்வளவு நாளாகிறது!

* * *

பிரான்ஸில் மந்திரி சபை நெருக்கடி

தினசரியில் 7 காலத் தலைப்பு

பிரான்ஸ்தானே, என்றைக்குத் தான் அதில் நெருக்கடியில்லை?

* * *

சென்னை சர்க்கார் ஆகஸ்ட் 30-ம் தேதியன்று மலபார் ஆலயப் பிரவேச மசோதாவை வெளியிட்டிருக்கிறார்கள். அடுத்த சென்னைச் சட்டசபைக் கூட்டத்தில் இம்மசோதா கொண்டுவரப்படும்.

* * *

பாட்னாவுக்கருகில் ஒரு கிராமத்தில் 20 முஸ்லீம்கள், ஜில்லா மாஜிஸ்திரேட் பசுக்கொலை சம்பந்தமாய் விதித்த தடையுத்திரவை மீறியதால் கைதியாயினர்.

## பர்மா கலவரம்

26—8—38ல் கூடிய ரங்கூன் பிரதிநிதி சபைக் கூட்டத்தில் பர்மாக் கலக சம்பந்தமாகக் கேள்வி ஒன்றிற்குப் பதிலளிக்கையில் அதுவரை கிடைத்துள்ள தகவல்களிலிருந்து 149பேர்கள் இறந்திருப்பதாகவும், 567 பேர்களுக்குக் காயமேற்பட்டிருப்பதாகவும் பதிலளிக்கப்பட்டது. சொத்துக்களுக்கு ஏற்பட்ட சேதத்தின் விபரம் இன்னும் சரிவர தெரியவில்லையென்றும், கலகத்தின் காரணங்களைப் பற்றி விசாரிக்க சர்க்கார் உத்தேசித்திருப்பதாகவும் கூறப்பட்டது.

கலக விளைவுக்குக் காரணமாயுள்ள "மௌல்வி அண்டு யோகி" என்னும் புத்தகத்தை அச்சிட்டு பிரசுரித்த பாபா என்பவருக்கு ஒரு வருடக் கடுங்காவலும், 500 ரூபாய் அபராதமும், அபராதம் செலுத்தத் தவறினால் மேலும் 6 மாதச் சிறைவாசத்தை அனுபவிக்கவேண்டுமென்றும் இன்ஸீன் மாஜிஸ்திரேட் 29-8-38-ல் தீர்ப்பளித்துள்ளார்.

பத்திரிகைகளுக்கு விதிக்கப்பட்டிருக்கும் தடையுத்தரவைக் கண்டிக்கும் முறையில் சட்டசபைக் கூட்டங்களில் அதிகாரிகள் செய்யும் பிரசங்கங்களைப் பிரசுரிப்பதில்லை என்ற ஒரே நோக்கத்துடன் அன்று கூடிய சட்டசபைக் கூட்டத்திற்கு பர்மியப் பத்திரிகைகளின் பிரதிநிதிகள் செல்லவில்லை.

இந்திரா நேரு குணமடைந்தார்.

* * *

இன்று பண்டித நேரு பிரேக் வந்து இன்றே லண்டன் பிரயாணப்படுகிறார்

* * *

வில்லிங்டன் பிரபு போனஸ் அயர்ஸில் சிறிது உடல் நலமின்றிக் கிடக்கிறார்.

* * *

பர்மிய சர்க்கார் விதித்துள்ள தடையுத்திரவைக் கண்டிப்பதற்காக, பர்மியப் பத்திரிகைகளின் நிருபர்கள் சட்டசபைகளுக்குப் போவதில்லை

* * *

சிந்து மாகாண நிலைமையைப்பற்றி காங்கிரஸ் பார்லிமெண்டரி சப்கமிட்டி விரைவில் தன் முடிவைக் கூறும்.

* * *

திருவாளர்கள் சி. டி. நாயகம், அண்ணாதுரை ஆகியோர் ஐகோர்ட்டில் கொடுத்திருந்த மனுக்கள் தள்ளுபடியாயின.

* * *

ஹிந்தி எதிர்ப்பு சம்பந்தமாய் சுவாமி அருணகிரிநாதருக்கு விதிக்கப்பட்டிருந்த தண்டனை, சென்னை ஐகோர்ட்டில் நடந்த அப்பீலில், ஒரு வருடத்திலிருந்து நான்கு மாதமாய்க் குறைக்கப்பட்டது.

* * *

லாகூருக்குப் பக்கத்தில் ஒரு கிராமம். அதில் ஒரு பெண் சந்நியாசி. அச் சந்நியாசினிக்கு தனது சீடர் (ஆண்) மீது அதிருப்தி உண்டாகவே இரண்டாவது சீடரைத் தேர்ந்தெடுத்துக்கொண்டார். முதல் சீடர் இதையறிந்து, தன் குருவாகிய சந்யாசினிக்கும் 2-வது சீடருக்கும் விஷத்தைக் கலந்து கொடுத்துவிட்டார். குருவும் 2-வது சீடரும் ஆஸ்பத்திரியில் குணமடைந்து வருகின்றனர். முதல் சீடர் கைதியானார்.

* * *

அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டியை டில்லியில் அக்டோபர் மாதத்தில் கூட்டலாமென ஒரு யோசனை இருந்து வருகிறது.



## திருப்புத்தூர் தாலூகா அரசியல் மகாநாடு

திருப்புத்தூர் தாலூகா 4-வது அரசியல் மகாநாட்டின் வரவேற்பு நிர்வாகக் கமிட்டியின் கூட்டம் 28-8-38 மாலை 4 மணிக்கு ஸ்ரீ. அழ. அருணாசலம் தலைமையில் நடைபெற்றது.

மகாநாட்டை செப்டம்பர் மாதம் 18-ம் தேதியில் நடத்துவதெனத் தீர்மானிக்கப்பட்டது.

மகாநாட்டில் தலைமை வகிக்க "இளமணி" ஆசிரியர் ஸ்ரீ டி. எஸ். சொக்கலிங்கமும், கொடியேற்றிவைக்க பசும்பொன் ஸ்ரீ உ. முத்துராமலிங்கத் தேவரும் இசைந்துள்ளார்கள். இன்னும் மந்திரிகளும் பல தலைவர்களும் விஜயம் செய்வார்கள்.

மகாநாட்டிற்கு பிரதிநிதிகள் தேர்ந்தெடுத்தனுப்புவதும் தீர்மானங்கள் அனுப்புவதும் செப்டம்பர் 10-ம் தேதி வரை நீடிக்கப்பட்டிருக்கிறபடியால், அதற்குள் அனுப்பிவைக்கும்படி எல்லாக் கமிட்டிகளையும் கேட்டுக்கொள்ளுகிறோம் என்று காரியதரிசி ஸ்ரீ சுப.சா. முருகப்ப செட்டியார் அறிவிக்கிறார்.

### காங்கிரஸ் நிர்வாகஸ்தர்கள் மகாநாடு

திருப்புத்தூர் தாலூகா காங்கிரஸ் நிர்வாகஸ்தர்கள் மகாநாடு 4—9—38 ஞாயிற்றுக்கிழமை காலை 9-மணிக்கு சென்னை அரசாங்க விவசாய இலாகா பார்லிமெண்டரி காரியதரிசி ஸ்ரீ என். எஸ். வரதாச்சாரியார் தலைமையில் நடைபெறும்.

மகாநாட்டில், காங்கிரஸ் நிர்மாண வேலைகளை திருப்புத்தூர் தாலூகா பூராவிலும் வேலைசெய்வதற்கான திட்டம் வகுப்பதற்கு வேண்டிய ஆலோசனைகளைக் கூறுவதற்கு காங்கிரஸ் ஆர்வமுள்ள முக்கியஸ்தர்கள் அனைவரும் வந்து கலந்து கொள்ளும்படி கேட்டுக் கொள்ளப்படுகிறது என காரியதரிசி ஸ்ரீ எஸ். சுடலைமுத்துப் பிள்ளை எழுதுகிறார்.

## பாகனேரி

### தனவைசிய இளைஞர் தமிழ்ச் சங்க ஆண்டு விழா

24-8-38 காலை, மாலை இரு நேரங்களிலும் திரு. டி. கே. சிதம்பரநாத முதலியார் தலைமையில் இவ்வூர் தனவைசிய இளைஞர் தமிழ்ச் சங்கத்தின் மூன்றாவது—நான்காவது ஆண்டு நிறைவுவிழாக் கொண்டாட்டம் நடைபெற்றது.

அவ்வமயம் இவ்வூர் ஸ்ரீ மீனாக்ஷி வித்தியாசாலை மாணவிகளால் கடவுள் வணக்கம் பாடிய பின்னர் திரு. பிச்சப்பா-சுப்பிரமணியம் "பாரதியார் பாட்டு" எனும் பொருள் பற்றியும், காரைக்குடி வித்துவான் திரு. அரு. சோமசுந்தரஞ் செட்டியார் "மாபெரும் புலவரும் உவமையும்" என்னும் பொருள்பற்றியும், அண்ணாமலை பல்கலைக் கழகத் தமிழ் விரிவுரையாளர் திரு. ந. மு. வேங்கடசாமி நாட்டார் "திருவள்ளுவர்" என்னும் பொருள்பற்றியும், ஆனந்த விகடன் ஆசிரியர் திரு. ரா. கிருஷ்ணமூர்த்தி "தமிழர் கலைகள்" எனும் பொருள் பற்றியும் சொற்பொழிவாற்றினார்கள். தலைவரின் விரிவான முடிவுரைக்குப் பின் திரு. வே. மாணிக்கம் வந்தனம் கூற விழா இனிது முடிவுற்றது.

மேற்குறிப்பிட்ட செந்தமிழ் வாணரின் திருமொழி கேட்க செட்டிமார் நாட்டின் பல பாகங்களிலிருந்தும் பெருந்திரளான மக்கள் வந்திருந்தனர். கூட்டத்திற்கு வந்திருந்தோரனைவரும் தமிழ் அன்னையின் அமுதினுமினிய சொற்பாக்களை தலைவர்களிடமிருந்தும் சொற்பொழிவாளர்களிடமிருந்தும் கேட்டு ஆனந்த பரவசமடைந்தனர். இவ்வூர் விவேகானந்தா சேவாசமிதிச் சாரணர்கள் சிறந்த தொண்டாற்றியது பாராட்டத்தக்கது.

### சேவாஸமிதிச் சாரணர்

27-8-38 மாலை 3 மணிக்கு இவ்வூர் விவேகானந்தா சேவாசமிதி வாலிபச் சாரண இயக்கத்தின் சார்பில் ஷை இயக்கத் தலைவர் திரு வே. மாணிக்கம் பர்மா நாட்டுக்கோட்டை செட்டியார்கள் சங்க அமைச்சராக பர்மாவுக்கு இவ்வூரினின்றும் நாளை பிரயாணம் செய்வதால் அன்னாருக்கு ஓர் பிரிவுபசார விருந்தும் கூட்டமும் நடைபெற்றது என காரியதரிசி அறிவிக்கிறார்.

பாகனேரி தனவைசிய இளைஞர் தமிழ்ச் சங்கச் சார்பில் 25-8-38 காலை குருபூசைமடத்தில் திரு டி. கே. சிதம்பரநாத முதலியார் உலகத்தின் பல விஷயங்களைப்பற்றியும், மாலை கம்ப ராமாயணத்தின் கவிநயங்களைப்பற்றியும் மிக விரிவாகச் சொற்பொழிவாற்றினார்.

டச்சுக்காரர்கள் யுத்தத்தில் அதிகமாய்க் கலந்துகொள்ளுவதில்லை. மற்ற தேசங்கள் யுத்தத்தில் இறங்கினால், அச்சந்தர்ப்பத்தில் வியாபாரஞ் செய்து அவசர அவசரமாகப் பணஞ் சம்பாதிப்பதிலேயே கண்ணுங்கருத்துமாயிருப்பர்.

## ஸேவா சமிதி கமிஷனர்

### ராம் பாஜ்பாய் சுற்றுப்பிரயாணம்

ஸேவா ஸமிதி சேப் ஸ்கௌட் கமிஷனர் பண்டித ஸ்ரீ ராம் பாஜ்பாயும் சென்னை மாகாண ஸ்கௌட் கமிஷனர் ஸ்ரீ எம். ஆர். வெங்கட்ராமனும் அடியிற்கண்டபடி மதுரை, இராமநாதபுரம், திருநெல்வேலி ஜில்லாக்களில் சுற்றுப் பிரயாணம் செய்வார்கள்.

2-9-38 முதல் 4-9-38 வரை மதுரை.

5-9-38 சாத்தூரும் திருநெல்வேலியும்.

6-9-38 திருநெல்வேலி.

8-9-38 முதல் 10-9-38வரை } காரைக்குடியும், செட்டிமார்நாடும்.

10-9-38 மாலை மதுரைக்கு வந்து சௌராஷ்ட்ர உயர்தரக் கலாசாலை பழைய மாணவர் சங்கத்தின் ஆண்டு விழாவிற்கு பண்டித ஸ்ரீ ராம் பாஜ்பாய் தலைமை வகிப்பார்.

இந்தியாவிலே பிரிட்டிஷார் தமது சர்வாதிகாரத்தைப் புகுத்தப் பார்க்கிறார்கள். ஆனால், மகாத்மா காந்தியடிகள்தாம் இந்தியச் சர்வாதிகாரத்தை வகித்து வருகின்றார்!

ஹாலந்தில் நடந்த உலகச் சமாதான மகாநாட்டிலே, காந்தியடிகள் இதில் அவரா என்று என்னைப் பலர் கேட்டனர். இக்கேள்விக்கு ஏகநாதரால்தான் தக்கபடி பதில் கூறமுடியும்.

—புரொபசர் லாக்கம்.

பிலிம் கதை

## தென்னலி ராமன்

"விதியை மதியால் வெல்லலாம்" என்ற உண்மை தென்னலி ராமன் வாழ்க்கையால் ரூபிக்கப்படுகிறது. ஆந்திர தேசத்தில் தென்னலி எனும் ஊரில் ஏழைக் குடும்பத்தில் ராமன் என்னும் பிராமணன் ஒருவன் இருந்தான். அவன் மனது மிகவும் தாராளமானது. ஒரு நாள் சிநேகிதர்களுடன் ஸ்நானம் செய்து திரும்பி வருகையில் ஒரு சந்நியாசியைப் பார்த்து எவரும் அவருக்கு பிக்ஷை அளிக்காமையைக் கண்டு அவரை பிக்ஷைக்கு அழைத்தான். பிக்ஷை ஏற்றுக்கொண்ட அம் மஹான் அவனது தர்ம சிந்தனையை மெச்சி ஸ்ரீ காளி தேவி பிரசன்னமாகும் மந்த்ரோபதேசம் செய்து ஆசீர்வதித்துச் சென்றார். பின்னர் காளி பக்தனாகிய தென்னலி ராமன் காளிதேவியைக் குறித்து ஜெபம் செய்ய, தேவியே நேரில் பிரசன்னமாகி அரசாங்கத்தில் விகடகவியாகவும், அவனது புகழ் பாரத நாட்டில் என்றும் ஓங்கி வளரவும் ஆசி கூறி மறைகிறாள். ராஜாங்க விதூஷகனாகிய தென்னலி ராமன், தனது புத்தியின் திறமையால் அரசனையும் தோற்கடிக்க, அரண்மனையிலிருந்து விரட்டி அடிக்கப்படுகிறான். தனது விடாமுயற்சியால் அரண்மனையின் உட்சென்று அரசனையும் மயக்கி பின்னும் ராஜாங்க விதூஷகனாகவே அமைக்கப்படுகிறான். நாவிதனை பிராமணனுக்க உத்திரவு கிடைத்திருப்பதால் அதை நிராகரிக்க ஓர் உபாயம் தேடவேண்டும் என்று கலங்கியிருந்த பிராமணர்கள், தென்னலி ராமனை ஆலோசனை கேட்க தென்னலி ராமன் தனது புத்தி வன்மையால் அரசனது ஆக்ஞையை மாற்றுகிறான்.

பின்னர் ஒரு நாள் அரசனது மூடத்தனத்தை விளக்கிக் காட்ட பிராமணர்களுக்கு சூடுபோட, அது கண்ட அரசன் கோபம் கொண்டு அவனைச் சிரச்சேதம் செய்ய உத்தரவளிக்கிறான். அதிலிருந்தும் தனது புத்தி வன்மையால் தப்பி வருகிறான். இதை யறிந்த மந்திரி ஏதாவது உபாயத்தால் தென்னலி ராமனை கொல்லத் தீர்மானித்து அரசனை தென்னலி ராமனுக்கு அநேக விதமான இடையூறுகள் ஏற்படுத்தச் சொல்ல, அதினின்றும் மீண்டு உயிர் தப்பிப் பிழைக்கின்றான். பின்னர் தன்னுடைய மனைவியின் கற்பைக் கெடுக்க மந்திரி வந்ததை அறிந்த தென்னலி ராமன், மந்திரியை அரசன் முன் அவமானமடையச் செய்கிறான். மந்திரியின் மதியீனமான செயல்களை அறிந்தும் அவன் மோக வலையில் சிக்கியே தென்னலி ராமனை உயிர் வாழவிடாது சூழ்ச்சிகள் செய்தானெனத் தெரிந்தும், அரசன் தனது ராஜ்யத்தினின்றும் அவனை நீக்கிவிட்டு தென்னலி ராமனை வெகுவாகப் புகழ்ந்து என்னாளும் அவனது புத்தி சாதுர்யம் தழைத்தோங்கி தனது ராஜாங்க மந்திரியாகவும் ஏற்படுத்துகிறான்.

வடலூரார் வருகை

'ஸ்ரீ ராமலிங்க சுவாமிக'ளது சரித்திரத்தை சென்னை ஜோதி பிக்சர்சார் படம் பிடிக்கப்போகின்றனர். இப்படம் கல்கத்தா பாரத் லக்ஷ்மி ஸ்டுடியோவில் தயாரிக்கப்பெறும். திருச்செந்தூர் முத்து பாகவதர் என்பார் ராமலிங்கராக நடிப்பார். மதுரை எஸ். சுந்தரம் என்ற நடிகையும் இப்படத்தில் தோன்றுவாரென்றும் தெரிகிறது.

# ஒலியும் நிழலும்

அஸ்வத்தம்மாளின் அடுத்த படம்!

மதுரை ராயல் டாக்கி டிஸ்டிரிபியூடர்ஸார் கே. அஸ்வத்தம்மாளைக் கொண்டு 'சக்குபாய்' என்னும் படத்தைத் தயாரிக்கப் போகின்றனர் என்ற வெண்திரைச் செய்திகள் வெளி வந்ததல்லவா? இப்பொழுது ஷை கம்பெனியார் ஷை படத்தை எதிர்பாருங்கள் என விளம்பரஞ் செய்திருக்கின்றனர். படம் விரைவில் வெளிவருமென எதிர்பார்க்கலாமல்லவா?

ஸ்ரீமதி ஏனுட்சி ராமராவ்

ஸ்ரீமதி ஏனுக்ஷி ராமராவ் 'ஹிமாலய புத்ரி' என்ற படத்தில் நடித்திருக்கின்றார். ஸ்டுடியோவிலே ஹிமயத்தைச் சிருஷ்டிக்க வில்லையாம். ஆனால் அவர் உண்மையிலேயே ஹிமாலயமலையில் நடந்து சென்றாராம். ஹிமாலயக் காட்சிகளை வெகு சிரமத்துடன் படம் பிடித்திருக்கின்றனர்.

'யாங்ரிலா' என்ற படத்தை பன்னுனி கம்பெனியார் தயாரித்திருக்கின்றனர். இப் படத்திலும் ஸ்ரீமதி ஏனுக்ஷி ராமராவ்தான் கதாநாயகி. இப் படம் உண்மைக் காதல் சம்பவங்களைச் சித்தரிக்கின்றது. படம் பார்ப்பவர்கள் அப்படியே கண்ணீர் விடாமலிருக்க முடியாதாம்.

பாரத வீரனில் பாட்டுகளில்லை!

ஒரு பிரபல ஆங்கில நாவலைத் தழுவி எழுதப்பெற்றுள்ள 'பாரத வீரன்' என்ற தமிழ்ப் படத்தை சென்னை ஸ்ரீனிவாஸ் ஸினிடோன் கம்பெனியார் தயாரிக்கப் போகின்றனர். பி.ஏ., பட்டதாரிகளான என். என். ராஜன், ஏ. கே. கோபால் ஆகிய இருவரும் இப் படத்தில் நடிக்கின்றனர். இப் படத்தில் ஒரு பாட்டுகூடக் கிடையாதாம்.

தியேட்டரில் காதலருக்கு தனி இடம்

ஆக்ஸ்போர்டு சினிமாத் தியேட்டரொன்றில் படம் பார்க்கப் போகும் காதலர்களுக்கு பிரத்தியேக இடவசதி செய்யப்பட்டிருக்கிறது. சினிமா நடந்து கொண்டிருக்கையில் காதலர்கள் முத்தமிட்டு குலாவுவதற்குத்தான் அந்தத்தனி இடம். அவ்இடம் மறைவாகவும், வெளிச்சக் குறைவாகவும் இருக்கிறது.

பலசரக்குக் கடையில் இலவச சினிமா!

போலந்திலும் பிரிட்டிஷ்நகர்களிலும் உள்ள சில ஹோட்டல்காரர்கள், பல சரக்குக் கடைகாரர்கள் முதலியோர், தங்கள் வியாபாரம் செழிப்பதற்காக ஒரு புதிய முறையைக் கையாளுகின்றனர். வாடிக்கைக்காரர்கள் வாங்க வேண்டியனவற்றை வாங்கிக் கொண்ட பிறகு பக்கத்திலுள்ள ஓர் அறையில் சினிமாச் செய்திப் படங்களை இலவசமாகப் பார்ப்பதற்கு வசதி செய்திருக்கின்றனர். தங்கள் விளம்பரத்திற்கு இதுவும் ஒரு சாதனமல்லவா! ஆங்கிலேயர் பொருள்ஈட்டுதற்கு அநுஷ்டிக்கும் முறையே அலாதி! அதிலும் விசித்திரம்!!

இயந்திர இந்தியா

அடுத்தாற்போல ஜெனரல் பிலிம்ஸ் கம்பெனியார் வெளியிடப்போகும் படம் 'இயந்திர இந்தியா' என்பதுதான். இதில் சோபன சமர்த் எனும் பம்பாய்ப் பிரபலஸ்தர் ஒருவர் நடிக்கிறார். இவர் புதிதாக சினிமாத் துறையில் இறங்கியுள்ளவர். இயந்திர இந்தியா என்றுள்ள பெயரிலிருந்து பலர் பலவிதமாகநினைக்கலாம். ஆனால் ஹாஸ்யச் சம்பவங்களே இதில் அதிகமாய் இருக்கும்.

மாயா ஜோதி

அல்லாவுத்தீனின் அற்புத விளக்கு என்ற கதையைத் தழுவிய 'மாயா ஜோதி' என்னும் தமிழ்ப் படத்தை டைரக்டர் பத்மநாபன் தயாரிக்கப் போகின்றார். எம். எம். சிதம்பரநாதன் கதாநாயகனாக நடிப்பார். இப் படத்தின் ஷூட்டிங் அடுத்த மாதம் ஆரம்பமாகலாம்.

புகழேந்திப் புலவர்

டெக்கான் சினிடோன் கம்பெனியார் 'புகழேந்திப் புலவர்' என்ற தமிழ்ப் படத்தைத் தயாரிக்கப்போவதாகத் தெரிகிறது.

வந்தேமாதரம்

சென்னையில் புதிதாக ஸ்தாபிக்கப் பெற்றுள்ள வாஹினி பிக்சர்சார் 'வந்தேமாதரம்' அல்லது மங்கள சூத்ரம் என்ற படத்தைத் தயாரிக்கப் போகின்றனர். காஞ்சனமாலா இப் படத்தில் நடிக்க ஒப்பந்தம் செய்யப் பட்டுள்ளார்.

ஷர்லியைப் போன்ற சிறுவன்

இன்னும் ஒரே வருஷத்தில் ஷர்லி டெம்பிளைப்போலவே ஒரு சிறுபையன் பிரக்கியாதியடையப் போகிறான். அவனுக்கு வயது 13. கெனி ரேயினல்ட்ஸ் என்று பெயர். அவன் ஒஹியோவில் பள்ளிக்கூடத்தில் படித்துக்கொண்டிருக்கும்போதே, ஆறுவது வயதில், நாடகத்தில் மிக அபூர்வமாக நடித்தானாம். விளம்பரங்களுக்காக அவனுடைய முகத்தைப் பெரும் வியாபாரிகள் பணம் கொடுத்துப் படம் பிடித்துக்கொள்ளுவது வழக்கமாம். இப்போது மூன்று வருஷங்களுக்கு முன் அவன் ஹாலிவுட்டுக்கு வந்தான். பல படங்களில் நடித்துப் புகழ்பெற்றிருப்பதுடன், ஷேக்ஸ்பியர் நாடகங்களிலும் நடித்துப் பிரக்யாதி பெற்றிருக்கிறான்.

அவன் உலக நிகழ்ச்சிகளை மிக ஆர்வத்துடன் படிக்கிறான். அரசியல் கட்டுரைகளைப் படித்துக் கத்தரித்து சேர்த்துவைத்துக்கொள்ளுகிறான். பாட்மின்டன் ஆடுவான், நீந்துவான், குதிரை சவாரி செய்வான். அவனுக்கு சினிமாத் துறையில் போட்டோ பிடிக்கவேண்டும், கதை எழுத வேண்டும், டைரக்ட் செய்ய வேண்டும், சொந்தத்தில் படம் தயாரிக்க வேண்டுமென்கிற ஆசைகளெல்லாம் இருக்கின்றன!

மாயா மாயவன்

சேலம் மாடர்ன் தியேட்டர்சார் தயாரித்துள்ள 'மாயா மாயவன்' என்ற தமிழ்ப் படத்தின் ட்ரெய்லர் காரைக்குடி ஸ்ரீராமவிலாசச் சினிமா பாலெஸில் காண்பிக்கப்படுகிறது. தமிழ் சினிமாப் படங்களின் ட்ரெய்லர்களுள் இது மிக விசித்திரமாக சிறந்த முறையில் தயாரிக்கப்பட்டிருக்கிறது. பல திடுக்கிடும் சம்பவங்கள் இப்படத்தில் நிறைந்துள்ளன. இப் படம் விரைவில் இத்தியேட்டருக்கு வருமெனச் சொல்லப்படுகிறது.

ஸ்யாம் சுந்தர்-ராதாகிருஷ்ணு

சென்னை லக்ஷ்மி சினிடோன் கம்பெனியார் இரண்டு புதிய தமிழ்ப் படங்களைத் தயாரிக்கப் போகின்றனர்.

அவர்களின் முதல் படமாகிய 'ஸ்யாம் சுந்தர்' என்ற படத்தில் தவமணிதேவி, ராஜூ, கிருஷ்ணன் முதலியோர் நடிக்கின்றனர். இரண்டாவது படமாகிய 'ராதாகிருஷ்ணு'வில் லக்ஷ்மி தேவி, ஸ்தானம் நரசிம்மராவ், சேஷன் ஆகியோர் நடிக்கின்றனர்.

இவ் இரு படங்களையும் பி. ஏ. கபூர் டைரெக்ட் செய்வார்.

### கார் விபத்துகள்

மோட்டார்கள், பஸ்கள் ஆகியவற்றினால் ஏராளமான விபத்துகள் சம்பவிக்கின்றன. இது சம்பந்தமாய் இந்திய மத்திய அசெம்பிளியில்கூட ஓர் மசோதா வந்துள்ளது. உலக முழுதும் இவ்விபத்துகள் நடக்கின்றன வெனினும், மரணமடைவோர் இந்தியாவில் எவ்வளவு அதிகம் என்பதை இப்புள்ளி விபரங்களிலிருந்து காணலாம். பத்தாயிரம் வண்டிகளுக்கு விகித முறை இது:—

| | | |
|---|---|---|
| இங்கிலாந்தில் | .... | 29 பேர் |
| இத்தாலி | .... | 61 ,, |
| ஹாலந்து | .... | 50 ,, |
| ஸ்விட்ஸர்லாந்து | .... | 50 ,, |
| பெல்ஜியம் | .... | 40 ,, |
| ஜெர்மெனி | .... | 40 ,, |
| இந்தியா | .... | 100 ,, |

பதினாயிரம் வண்டிகளுக்கு நூறு பேர்கள் விகிதம் இந்தியாவில் மரணமடைகிறார்கள். இத்தொகை இவ்வளவு அதிகமாய்க் காண்பதற்கு என்ன காரணம்? — டிரைவர்களுடைய கெட்டிக்காரத்தனம், ரோடுகள் இருக்கின்ற அழகு, குடியானவர்கள் ரோடுகளில் நடந்துபோகும் ஒய்யாரம், நிர்வாகத்தின் நேர்த்தி ஆகியவற்றால்தான் இவ்வளவு பேர்கள் சாகிறார்கள்! அல்லவா?

### கத்துகிற பாம்புகளும் விஷம் பீச்சும் பாம்புகளும்

லண்டன் மிருகக் காட்சிச்சாலையில் ஏராளமான பாம்புகள் இருக்கின்றன.

பாம்பு ஜாதியிலுள்ள சகல வகைகளும் இங்கு கொண்டுவரப் பெற்று வளர்க்கப்படுகின்றன. சமீபத்தில் தென் ஆப்பிரிக்கா, வட அமெரிக்கா, கானடா ஆகிய பிரதேசங்களிலிருந்து பல பாம்புகள் வந்தன.

'நல்ல பாம்பு' இனத்தைச் சேர்ந்த அதிசயமான சில பாம்புகள் வந்திருக்கின்றன. இப் பாம்புகள் விஷத் துளிகளைத் தம் வாயிலிருந்து (வாய்ப்பக்கத்திலுள்ள விஷப்பைகளிலிருந்து) பீச்சுகின்றன. இத் துளிகள் வெகுதூரம் வரையில் பலஅடிகள் பரவிச் செல்லுகின்றன. இத் துளிகள் பட்ட மாத்திரத்தில் கண் பொட்டையாகி விடுகிறது. இப்படி சில வாரங்கள் பொட்டையாகி மீண்டும் சரியாய்ப் போவது முண்டு; குணமடையாமல் எப்போதும் குருடாய்ப் போவதுமுண்டு.

ஆகையால், இப்பாம்புகள் உள்ள அறைக்குள் போகும்போது காட்சிச்சாலை அதிகாரிகள் மோட்டார் கண்ணாடிகளைக் கண்களில் அணிந்து கொண்டு போகிறார்கள். விஷத்துளிகள் இக்கண்ணாடிகளில் பட்டு வழிவது நன்குதெரியும்.

'விரியன்' பாம்பு வகை ஒன்று வந்திருக்கிறது. இப்பாம்பு முட்டைகள் இடும்முறை புது விதமாயிருக்கிறது.

'ஒட்டைப் பாம்பு' என்று இன்னோர் வகை. இது இதன் இனத்தைப் போல 4 அடி இல்லாமல் $1\frac{1}{2}$ அடிதான் இருக்கிறது. இது கத்துகிறது. இதன் சப்தம் சில அடிகள் தூரம் வரைக் கேட்கிறது!

'குணவதி' பத்திரிகை ஆசிரியரும், கொமில்லா முஸ்லிம் லீக்கின் பிரபல அங்கத்தினருமான ஸ்ரீ எச். ஏ. காபூர் காங்கிரஸ் உறுதிமொழிப் பத்திரத்தில் கையெழுத்திட்டு காங்கிரஸிற் சேர்ந்துவிட்டார்.



### காரையார்கோவில்

பெற்றோர்கள் சங்கம்

இச்சங்கத்தின் சாதாரணக் கூட்டமொன்று 12-8-38-ந்தேதி இரவு 8 மணிக்கு திரு. மு. து. ஆதிமூலம் பிள்ளையவர்கள் தலைமையில் ஸ்ரீ ராம கிருஷ்ண பரமஹம்சர் வாசகசாலைக் கட்டிடத்தில் கூடிற்று. சென்ற மாதத்திய நிகழ்ச்சிகள் ஜில்லாக் கல்வி யதிகாரியின் சுற்றறிக்கை, திரு. பி. நா. சொக்கலிங்கம் செட்டியாரின் கடிதம், ஜில்லா போர்டு தலைவர் கடிதம் முதலியன வாசித்து ரிகார்டு செய்யப்பட்டன.

இவ்வூரில் பழைய மாணவர் சங்கம் ஒன்று ஏற்படுத்தி அதற்குக் கீழ்க்கண்ட நிர்வாகஸ்தர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

தலைவர்:—திரு. அ. மு. பொ. ஜெம்பு கேஸ்வர பாண்டியம் பிள்ளை, உப-தலைவர்:—சி. வ. கண. சிவஞானமூர்த்தி, காரியதரிசி:—திரு. ஆர். வெங்கடேஸ்வரன், உப-காரியதரிசி:—திரு. மு. கோ. தண்டபாணி, பொக்கிஷதார்:—திரு. சி. சாத்தையா பிள்ளை. இன்னும் முக்கிய அங்கத்தினர் ஐவர் தேர்ந்தெடுக்கப்பெற்றனர்.

மீண்டுமோர் கூட்டம்

27—8—38ல் காரையார்கோவில் ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸ வாசகசாலைக்கட்டிடத்தில் ஷையூரில் நிறுவப்பட்டிருக்கும் பள்ளி மாணவர்களின் பெற்றோர்கள் சங்கத்தின் கூட்டம் ஸ்ரீ சி. சாத்தய்யா பிள்ளை தலைமையில் இரவு 8-மணிக்கு கூடிற்று.

1. பெற்றோர் சங்கத்தின் நடவடிக்கைகள் வாசிக்கப்பட்டு ரிகார்டு செய்யப்பட்டது.

2. காரையார்கோவில் பள்ளி மாணவர்களின் பெற்றோர்கள் சங்கம் 20—6—1938-ல் ஷையூர் போர்டு ஆண் பாடசாலை தலைமை உபாத்தியாயர் ஸ்ரீ வி. ராஜகோபாலய்யருடைய தொண்டு பாராட்டப்பெற்றது.

ஜில்லாபோர்டு அதிகாரிகள் இவரை தொண்டிக்கு மாற்றுதிருக்கும்படியும், 6-வது வகுப்பு ஏற்படும் வரையிலாவது இப்படிச் செய்யவேண்டுமென்றும் கோரிற்று.

3. 1938-ளு ஆகஸ்டு-மீ 20-உ இரவு செங்கோட்டை பாசஞ்சருக்கு ஏற்பட்டவிபத்துக்குள்ளானபிரயாணிகளின் குடும்பத்தாருக்கு மிருந்த அநுதாபம் தெரிவித்துக் கொண்டது.

கிராமக் காங்கிரஸ்

27—8—1938ல் காரையார்கோவில் கிராமக் காங்கிரஸ் சபையின் சாதாரணக் கூட்டமொன்று ஷைசபைத் தலைவர் ஸ்ரீ ஆ. மெய்க்கோல் உடையார் தலைமையில் இரவு 9 மணிக்கு நடைபெற்றது. அது சமயம் கீழ்க்கண்ட விஷயங்கள் நிறைவேறின.

20-ந் தேதி இரவு செங்கோட்டை பாசஞ்சருக்கு ஏற்பட்ட விபத்தைப் பற்றி அநுதாபத் தீர்மானம் நிறைவேறியது.

போர்டு ஆண் பாடசாலை தலைமை உபாத்தியாயர் ஸ்ரீ வி. ராஜகோபாலய்யரை தற்போதுவேறு ஊருக்கு மாற்றக்கூடாதெனக் கேட்டுக்கொண்டது.

மறவமங்கலம் ஆஸ்பத்திரி விஷயத்திற்கு கட்டிட வசதி ஏற்படுத்திக் கொடுக்க இவ்வூர் கிராமக் காங்கிரஸ் சபையிலிருந்து அடியிற்கண்ட அங்கத்தினர்கள் நேரில் ஸ்தலத்துக்குச் சென்று வேண்டிய காரியங்களைச் செய்ய வேணுமாயும் தீர்மானிக்கப்பட்டது.

ஸ்ரீமான் (1) மு. து. ஆதிமூலம் பிள்ளை (2) ஆ. சொ. வ. காளிமுத்துப் பிள்ளை (3) ஆ. மெய்க்கோல் உடையார் (4) அ. மு. பொ. ஜெம்புகேஸ்வர பாண்டியன் பிள்ளை (5) சிவ. கண. சிவஞானமூர்த்தி.

1938-ளு செப்டம்பர்மீ 30உக்குள் காங்கிரஸ் அங்கத்தினர்கள் சேர்க்கும் விஷயத்தில் காங்கிரஸ் நிர்வாகஸ்தர்கள் தக்க பிரயாசை எடுக்கவேணுமாய் மறுமுறையும் வற்புறுத்தி தீர்மானிக்கப்பட்டது.

ராமகிருஷ்ணு வாசகசாலை

காரையார் கோவில் ஸ்ரீராமகிருஷ்ண வாசகசாலையின் மாதாந்தரக் கூட்டம் 21—8—38ல் திரு. மு. ஆதிமூலம் பிள்ளை தலைமையில் கூடியது.

அவ்வமயம் வாசகசாலைக்கு 'ஊழியன்' 'தினமணி' 'குமரன்' 'ஆனந்த விகடன்' 'தமிழ்மணி' 'நவசக்தி' முதலான ஆறு பத்திரிகைகளையும் வாசகசாலையின் நிதியிலிருந்து வரவழைப்பதென்று தீர்மானிக்கப்பட்டு, வந்தனோபசாரத்துடன் கூட்டம் முடிந்தது என காரியதரிசி திரு. மு. கோதண்டபாணி அறிவிக்கிறார்.

# பட்டுப்பட்டு சீனமுஸ்லீம்கள் கற்ற பாடம்

## வாழும் தேசத்தை விட்டுக்கொடுத்தலாகாது

### சீனத்துப் போர்முனையில் முஸ்லீம்கள் தீரம்

[வாழும் தேசத்தை மறந்து அயலாரிடமும் நம்மிடையேயும் வர்த்தகப் பேச்சு நடத்துவது இந்நாட்டில் ஒரு பீடைபிடித்த பழக்கம். ஸ்ரீ. ஜின்னு இப் பழக்கமுடையவர்; இதற்காக 'முஸ்லிம் லீக்' என்று ஒன்றை அமைத்துக்கொண்டு அடிக்கடி சரியான நெருக்கடிச் சந்தர்ப்பங்கள் வாய்க்கும்போழுதெல்லாம் தேச முழுதையும் மிரட்டுகிறார். ஆனால் சுமார் 5 கோடி முஸ்லீம்கள் இன்று சீனத்திலே என்ன செய்கிறார்கள் என்பதைப் பொதுவாகவுள்ள சீனப்பத்திரிகை வாயிலாகக் கேட்டு ஓர் முடிபுக்கு வருவதில் யாருக்கும் ஆட்சேபனையில்லையே? சரி.]

★

முகமதியர்கள் உலகமுழுதும் பரவியிருக்கிறார்கள். சீனத்திலும் ஏராளமாய் வசிக்கின்றனர். மற்ற பாகங்களிலுள்ள முஸ்லீம்களைவிட இவர்கள் மதப் பற்றில் எள்ளத்தனையும் குறைந்தவர்களல்லர். எனினும் சீனு-ஜப்பான் யுத்தத்தில், சீனத்தின் சார்பாகத்தான் முஸ்லீம்கள் அனைவரும் யுத்த களத்திலே இறங்கியுள்ளார்கள். இது பற்றி 'போர் முனையில் சீனு' எனும் சீனப் பத்திரிகை கூறுவதாவது:—

சீனத்து அரசியல் பிரச்னைகளிலே சீனுவிலுள்ள முஸ்லீம்கள் எப்போதுமே முக்கியமான பங்கெடுத்துக் கொள்ளுவார்கள். சீனுவில் முஸ்லீம்கள் 4,80,00,000 (நான்கு கோடி என்பது லட்சம்) பேர்கள் இருக்கிறார்கள். இவர்களுடைய முன்னோர்கள் சுமார் 1500 ஆண்டுகட்கு முன்பு சீனுவில் குடியேறினார்கள். இத்தனை ஆண்டுகள் கடந்தும், இப்போதுள்ள முஸ்லீம்களிடம் பழைய வழக்கங்கள், மதச் சம்பிரதாயங்கள், சடங்குகள் யாவும் கட்டுக் குலையாமல் இருந்து வருகின்றன.

இன்று சீனத்தில் போர்க் குணம் கொழுந்துவிட்டு எரிகின்றது. இக் குணம் முஸ்லீம்களையும் பற்றியிருக்கிறது. சீனத்தின் வடமேற்குப் பிரதேசங்களிலேதான் முஸ்லீம்கள் அதிகம்; முக்கியமாக கன்சு, நிங்ஸியா, சிங்கியாங் ஆகிய இடங்களில்.

சுபாவத்திலேயே முஸ்லீம்கள் பராக்கிரமமும் தைரியசாலிகளுமாவர். இவைகட்கேற்ப, இம்முஸ்லீம்கள் சீனத்தின் வடமேற்குத் திசையில் ஒரு நெடுஞ் சுவர்போல எதிரிகள் உட்புகமுடியாதபடி தடுத்துக்கொண்டிருக்கின்றனர். இதுபற்றித்தான் ஜப்பானிய சதிகாரர்கள் நீண்ட காலமாகவே வடமேற்கு மாகாணங்களை ஒரு 'முஸ்லீம் சாம்ராஜ்யம்' என்று மதித்து வந்திருக்கிறார்கள்.

1931–34-ம் ஆண்டுகளிலே, சிங்கியாங் பிரதேசத்திலே, ஜெனரல் மா சூங் இங் என்ற ஒரு முஸ்லீம் இயக்கத்தின் தலைவர் பிரமாதமான ஆர்ப்பாட்டங்களைச் செய்துவந்தார். அவருக்கு ஜப்பானியர் மிக கரிசனத்தோடு உதவிபுரிந்தார்கள். ஆனால் ஜெனரல் மா முறியடிக்கப்பட்டார்; சோவியத் ருஷ்யாவில் சரண்புகுந்தார்; சோவியத் சர்க்கார் அவரைச் சிறையில் போட்டனர். அத்துடன் ஜப்பானியர் கட்டின மனக் கோட்டையும் இடிந்தது.

சீன சர்க்கார் தமது புத்திசாலித்தனத்தாலும் தமது இயற்கையான நல்ல சுபாவத்தாலும் முஸ்லீம்கள் 4,80,00,000 பேர்களை ஒன்றாய்ச் சேர்த்து விட்டனர்.

ஒன்றுபட்டிருந்தால் வாழ்வுண்டென்பதையும் பிரிந்துபட்டால் அழிவுதானென்பதையும், சீன முஸ்லீம்கள் பல சம்பவங்களிலிருந்து பாடங்கற்றுக் கொண்டிருக்கிறார்கள். அவர்கள் தம் இஷ்டம்போல் நடந்துகொள்ளுவதற்கு விடப்பட்டிருக்கிறார்கள். அதன்படித்தான், இப்போது ஏற்பட்டிருக்கிற நெருக்கடியிலே தேசிய சர்க்காரை ஆதரித்துச் ஜப்பானியருடன் சமர் புரிகின்றார்கள்.

யுத்தத்தில் மிகச் சமர்த்தர்

இம் முஸ்லீம்கள் அனைவரும் யுத்தம் புரிவதில்மிகக் கெட்டிக்காரர்கள். கன்சு, நிங்ஸியா, சிங்ஹேய் முதலிய இடங்களிலுள்ள முஸ்லீம்கள் விசேஷமான யுத்தத் திறமை வாய்ந்தவர்கள். நிங்ஸியாவில் ஜெனரல் மா ஹங் குவே என்று ஒரு பிரபல முஸ்லீம் இருக்கிறார். அவர் கைதேர்ந்த நல்ல சிப்பாய். அவர்தான் அந்தப் பிரதேசத்துக்குத் தளகர்த்தர். இதே போல சிங்கேயில் ஜெனரல் மாலீங் இருக்கிறார். இவர் அந்த மாகாணத்துக்குக் கவர்னர். இதிலுள்ள பட்டாளங்களுக்கு ஜெனரல் மா பூ பாங் படைத் தலைவராக இருக்கிறார்.

கன்சு என்பது இன்னோர் மாகாணம். இங்கும் முஸ்லீம்கள் இருக்கின்றார்கள். என்றாலும் மேற்சொன்ன மாகாணங்களைப்போல அவ்வளவு அதிகம் கிடையாது. இதற்கு ஜெனரல் சூ ஷயோ லியாங் என்பவர்தான் கவர்னர். இவர் ஜெனரல் சியாங்கே ஷேக்கின் நம்பிக்கையான ஆட்களில் ஒருவர். இவர் பல்லாண்டுகட்கு முன்னதாகவே யுத்த வீரர் என்கிற பெயரைப் பெற்றவர்.

மற்றும், சியாங்கே ஷேக்கின் வலதுகை போல இந்த யுத்தத்தில் அவருக்கு உதவி புரிந்து வருகிறவர் ஜெனரல் பாய் சூங் ஸீ என்பவர்தான். அவர் சீன யுத்தப் படைகள் முழுதுக்கும் டிப்டி தளகர்த்தர். அவர் ஒரு வைராக்கியம் பொருந்திய பக்கா முஸ்லீம். அவரைத்தான் இன்று சீனுவிலுள்ள எல்லா முஸ்லீம்களும் தங்களுடைய ஒப்பற்ற தலைவராய் மதிக்கிறார்கள்.

—மாடர்ன் ரெவ்யூ.

### சரோஜனி வாசகசாலை

முதலாவதாண்டு நிறைவு விழா

29-8-38ம் நாள் திங்கட்கிழமை மாலை 4-மணிக்கு ஜெயங்கொண்டபுரம் சரோஜனி வாசகசாலையின் முதலாவதாண்டு நிறைவு விழா நடைபெற்றது. தலைவர்வரவேற்பு ஊர்வலம், பாண்டு வாத்தியங்களுடன் புதுஊரணிப் பொட்டலுக்குச் சென்றது. அங்கு தேச பக்தர் ஸ்ரீ சா. கணேசன் கொடியேற்றுவித்து சொற்பெருக்காற்றினார். குரூப் போட்டோ ஒன்று எடுக்கப்பட்ட பின்னர் ஊர்வலம் ஸ்ரீமுரு. மெ. இல்லத்தையடைந்ததும், தேசபக்தர் ஸ்ரீ மெ. ராம. மெ. மெய்யப்ப செட்டியார் தலைமையில் வாசகசாலையின் ஆண்டுவிழா ஆரம்பமாயிற்று. நகரத்தார் பள்ளிக்கூடத்து மாணவிகள் நாட்டு வாழ்த்துப்பாடினர். காரியதரிசி ஸ்ரீ அரு. ராம. சித. ராமசாமி செட்டியாரால் அறிக்கை வாசிக்கப்பெற்றதும் தலைவர்முன்னுரை கூறினார். பின்னர் ஸ்ரீ ராம. சிதம்பரம் "இருந்திய வாழ்வு" என்பதுபற்றியும், ஸ்ரீ சா. கணேசன் "அறமுணர்ந்த அருந்தமிழர்" என்பதுபற்றியும், நகரசபைத் தலைவர் ஸ்ரீ ராய. சொக்கலிங்கன் "இலங்கை வீரன்" என்பதுபற்றியும் விரிவாகவும் அழகாகவும் பேசினார்கள். தலைவர் முடிப்புரை, நன்றி கூறுதலுக்குப்பின் இரவு 8-30 மணிக்கு எல்லோருக்கும் விருந்தளிக்கப்பெற்று விழா இனிது நிறைவேறியது என காரியதரிசி அறிவிக்கிறார்.

### புதிய சஞ்சிகை

'முரசொலி' என்ற மாதப் பத்திரிகை அக்டோபர் மாதத்திலிருந்து திருப்புத்தூரினின்று வெளிவருமென்றும், ஸ்ரீமான்கள் கே. வைரவிரத்னம், பி. எல். கோவிந்தராஜு ஆகியோர் அப்பத்திரிகையின் கூட்டு ஆசிரியர்களாயிருப்பார்களென்றும் தெரிகிறது.

### சொக்கநாதபுரத்தில் சங்கீதக் கச்சேரி

ஆவணி-மீ 24உ (5-9-38) சொக்கநாதபுரம் ஸ்ரீ பெரி. முத்து. மு. முத்தையா செட்டியாருக்கு, அவரது இல்லத்தில் சஷ்டியப்தபூர்த்தி சாந்திக் கல்யாணம் நடைபெறும். அன்று மாலை 3-மணிக்கு மைசூர் ஸ்ரீமதி பாலபாரதி யதுகிரி குமாரியால் (ராமதாஸ் சரித்திரம்) ஹரிகதாகாலட்சேபமும் அன்று இரவு பஞ்சமூர்த்திகளின் திருவுலாவும் அதில் நாதசுர வித்வான் திருவெண்காடு சுப்பிரமணியம் பிரதர்களால் நாதசுரக் கச்சேரியும் நடைபெறுமெனத் தெரிகிறது.

# பழம் போக்கைப் பின்பற்றிய புதுமை

## மேஜை நாற்காலிகளில்லாமல் தேஜோமயம்

### வ. ரா. ஜில்லா போர்டு நடவடிக்கைகள்

(நமது நிருபர்)

வட-ராமநாதபுரம் ஜில்லா போர்டின் சாதாரணக் கூட்டமொன்று 27-8-38 சனிக்கிழமை மாலை 3மணிக்கு சிவகெங்கை லோகல் பண்டு அஸிஸ்டெண்ட் இஞ்சினீயர் ஆபீஸ் கட்டிடத்தில் தலைவர் ஸ்ரீ க. வெ. சித. வெங்கடாசலஞ் செட்டியார் தலைமையில் கூடியது. தலைவருட்பட மொத்தம் 15 அங்கத்தினர்கள் விஜயஞ்செய்திருந்தனர்.

நாற்காலிகள் இல்லை; மேஜைகளும் இல்லை. தரையில் ஜமக்காளம் விரிக்கப்பட்டிருந்தது. தலைவர் உட்காருவதற்காக மொத்தமான மெத்தையும், சாய்வதற்கு திண்டுகளும் இருந்தன. தலைவர் ஸ்தானத்துக்கு இடதுபுறத்தில் ஒரு வரிசையும், வலதுபுறத்தில் இரண்டு வரிசைகளும் மரத்தால் செய்யப்பெற்ற சாய்வு கைப் பெட்டிகள் (டிராயர்களில்லாத டெஸ்க்குகள்) இருந்தன. தலைவர் தமது ஆசனத்தில் வந்து அமர்ந்தார். இடதுபுறத்தில் டெஸ்க்குகளுக்கு எதிராய் ஜஸ்டிஸ் அங்கத்தினர்கள் வந்து ஒரு வரிசையாய் உட்கார்ந்தார்கள். வலதுபுறத்திலிருந்த இரண்டு வரிசைகளிலும் காங்கிரஸ் அங்கத்தினர்கள் இருந்தனர். பழங் காலத்தில் சில மொகலாயச் சக்கரவர்த்திகள் நடத்தி வந்த இந்நாட்டு தர்பார் கூட்டம்போல, வடக்கு ராமநாதபுரம் ஜில்லா போர்டுக் கூட்டம் இன்று காட்சியளித்தது.

அண்மையில் சம்பவித்துள்ள அய்யலூர் ரயில் விபத்துபற்றி போர்டார் அநுதாபப்படுகின்றனரென்றும், தேசபக்தர் ஸ்ரீ ராஜா ராவின் மரணங் குறித்து போர்டின் அநுதாபத்தைச் சம்பந்தப்பட்டோருக்குத் தெரிவிப்பதென்றும், ராஷ்ட்ரபதி சுபாஷ் சந்திர போஸ் சமீபத்தில் தென்னாட்டிற்கு விஜயஞ் செய்யும்போழ்து அன்னாருக்கு வரவேற்புப் பத்திரம் வாசித்தளிப்பதென்றும், ஆஸ்பத்திரிகளில் இருக்கும் டாக்டர்கள் இரண்டு வருஷங்கட்கு மேல் ஒரே ஊரில் இருக்கக்கூடாதென்றும் கூட்ட ஆரம்பத்தில் பல தீர்மானங்கள் நிறைவேற்றப் பெற்றன.

#### வைத்திய வசதி

திருவாடானைத் தாலூகா மங்கலக்குடி கிராமத்தில் கிராம ஆஸ்பத்திரி ஒன்று ஏற்படுத்துவதென்றும், கீழச்சிவற்பட்டி ஆஸ்பத்திரிக்கு ஷை ஊர் ஸ்ரீ எஸ். கே. ஆர்.எஸ். எம். முத்தையா செட்டியாரால் ரூ. 12,000 கண்ட்ரிபியூஷன் கொடுப்பதாகச் சொன்னதைப்பற்றி போர்டார் வந்தனந் தெரிவிப்பதாகவும், ஷை தொகையிலிருந்து லேடி டாக்டர் நியமனஞ் செய்ய ரூ. 7,000 என்றும், கட்டிடம் கட்டுவதற்கு ரூ. 5,000 என்றும் செலவிடுவதெனத் தீர்மானிக்கப்பெற்றது. கீழப்பூங்குடிக்கிராமத்தில் ஒருமருத்துவச்சி ஏற்படுத்துவதென்று ஸ்ரீ. பி. நா. சொக்கலிங்கஞ் செட்டியாரால் கொண்டுவரப்பெற்ற தீர்மானம் ஏகமனதாக நிறைவேறியது.

#### ரஸ்தாக்கள்

திருப்புத்தூர் தாலூகா ஆவினிப்பட்டி எல்லையிலிருந்து கிழச்சிவற்பட்டி பஞ்சாயத்து எல்லைவரை ஏற்கனவே 1½ மைல் தூரமுள்ள ரோடு இருப்பதுடன் இரண்டுமைல் நீளமுள்ள ரோட்டை அக்வயர்செய்து போர்டார் பராமரிப்பதென்றும், செவ்லூர் பெரியா மருதுபட்டி ரோட்டை சர்வே செய்வதற்கும், பூலாங்குறிச்சி ஆஸ்பத்திரி கட்டிட வேலைகளை மேல்பார்ப்பதற்கும் 7-6-38 முதல் ஒரு ஸ்பெஷல் ஓவர்சீர் நியமித்ததென்றும், அலவாக்கோட்டையிலிருந்து ஏறியூருக்கு ஒரு ரோடு போடுவதற்காக ஏறியூர் வாசிகள்வழங்கும் நன்கொடை ரூ. 3000ஐ ஏற்றுக்கொண்டு அவர்கட்கு போர்டார் வந்தனந் தெரிவிப்பதென்றும், ரோட்டிற்கு வேண்டிய இடங்களை அவர்களே அக்வயர் செய்து வாங்கித் தரவேண்டுமென்றும், மதகுபட்டியிலிருந்து அலவாக்கோட்டை போகும் ரஸ்தாவை ஜில்லா போர்டார் எடுத்துக்கொள்ளுகிறதென்றும் தீர்மானிக்கப்பெற்றன.

#### ஜல வசதி

திருப்புத்தூர் தினசரி மார்க்கட்டில் ஒரு கிணறு வெட்டுவதற்கு ரூ. 950 உள்ள ரிவைஸ்டு எஸ்டிமேட் தொகையும், கிராமவசதி தண்ணீர்சப்ளை ஸ்கீம்படி 38-39ம்வருடத்தில் வெட்டவேண்டிய கிணறு வேலைகளுக்கு ராமநாதபுரம் ஜில்லா பூராவுக்கும் ரூ. 20,230 ஒதுக்கி வைக்கப்பட்டிருக்கிறதென்ற அரசாங்க உத்தரவும் ரிகார்டு செய்யப்பெற்றன.

ரேஞ்சு ஆபீசர்களுக்கு சயிண்டிபிக் ஆயுதங்கள் அல்லது கருவிகள் சப்ளைசெய்ய வடராமநாதபுரம் ஜில்லா போர்டு எஞ்சினீயர் கோரியுள்ள ரூ. 850 சாங்ஷன் செய்யப்பெற்றது.

'இந்த போர்டின் உத்தியோகஸ்தர்களையும், வேலைக்காரர்களையும் தருமத்திற்காக நடத்தப்படும் டிராமா முதலியவைகளுக்கு டிக்கட்டுகள் விற்பனை செய்யவோ, அல்லது பணம் வசூல் செய்யவோ சொல்லக்கூடாது என்று இந்த போர்டார் தீர்மானிக்கிறார்கள்' என்ற தீர்மானம் ஸ்ரீ கருமுத்து சிவலிங்கஞ் செட்டியாரால் கொண்டுவரப்பெற்று ஏகமனதாக நிறைவேறியது.

#### காரியதரிசி நியமுகம்

ஜில்லா போர்டு காரியதரிசி நியமுக விஷயத்தில் ஜில்லா போர்டு தலைவர் சரியானபடி நடந்துகொள்ளவில்லை என்பதற்காக தலைவரைக் கண்டித்து ஜில்லா போர்டார் முன்பு செய்துள்ள தீர்மானத்தை ஏன் ரத்துச்செய்யக்கூடாதென்பதற்கு ஒரு மாத காலத்திற்குள் காரணம் காட்டும்படி வ. ரா. ஜில்லா போர்டாருக்கு கவர்ன்மெண்டார் நோட்டீஸ் கொடுத்துள்ள கடிதம் வாசிக்கப்பெற்று, காங்கிரஸ், ஜஸ்டிஸ் ஆகிய இரு கட்சி மெம்பர்களாலும் விவாதிக்கப் பெற்றது. முடிவில் காரியதரிசி நியமுக விஷயத்தில் யாதொரு பிரசுரமுமின்றி ஜில்லா போர்டுத் தலைவர் நடந்துகொண்டதைப்பற்றி ஜில்லா போர்டார் கண்டனஞ்செய்த விஷயம் பற்றி கவர்ன்மெண்டார் செய்யும் முடிவை போர்டார் ஆமோதிக்கின்றனரென்று முடிவு செய்யப்பட்டது. மற்றும் பல மாமூலான விஷயங்கள் ஆலோசிக்கப்பட்ட பின்னர் கூட்டம் இரவு 8-மணிக்கு முடிவுற்றது.

---

ஹாலந்து தேசத்தில் கோழிகளும் மாடுகளும் அதிகம். கோழி வளர்ப்புத்தான் அதன் நாட்டுத் தொழில்.

# சென்னை ரேடியோ

### 1-9-38 வியாழக்கிழமை

மாலை 5-30 ஸ்ரீமதி அலமேலு ஜெயராமய்யர் வாய்ப்பாட்டு.

இரவு 7-15 'ஒரு வழக்கறிஞரின் வாழ்வு' என்பதுபற்றி ஸ்ரீ வி. கோவிந்தராஜாச்சாரி தெலுங்கில் பேசுவார்.

7-30 குன்றக்குடி ஸ்ரீ வெங்கட்ராம ஐயர் வாய்ப்பாட்டு.

8-25 அ. இ. ரே. கர்நாடக வாத்தியக் கோஷ்டி.

8-30 குன்றக்குடி ஸ்ரீ வெங்கட்ராம ஐயர் வாய்ப்பாட்டு.

9-15 வர்த்தமானமும், வானிலை அறிக்கையும்.

9-30 'நீர்ப்பாசனம்' என்ற விஷயம்பற்றி கனம் மந்திரி யாகூப் ஹாசன் ஆங்கிலத்தில் பேசுவார்.

9-45 ஐரோப்பிய சங்கீதம்.

### 2-9-38 வெள்ளிக்கிழமை

மாலை 5-30 ஸ்ரீமதி ஆர். லக்ஷ்மி அம்மா வாய்ப்பாட்டு.

6-00 அ. இ. ரே. வாத்தியக் கோஷ்டி.

6-10 ஸ்ரீ தாமோதராச்சாரி வாய்ப்பாட்டு.

இரவு 7-15 'சினிமாவின் செல்வாக்கு' என்ற விஷயம்பற்றி ஸ்ரீ என். ராமரத்னம் தமிழில் பேசுவார்.

8-20 அ. இ. ரே. வித்வான் புல்லாங்குழல்.

8-30 'மாயப் பிரபஞ்சம்' என்ற தமிழ்ப் படத்தை அ. இ. ரே. நடிகர்கள் நடத்துவார்கள்.

9-15 வர்த்தமானமும் வானிலை அறிக்கையும்.

9-30 'நாடகக் கலையின் நவீன முறைகள்' என்ற விஷயம் பற்றி மிஸ்டர் அலெக்ஸ் எல்மோர் ஆங்கிலத்தில் பேசுவார்.

9-45 ஷெரீப் அலிகான் வாய்ப்பாட்டு.

### 3-9-38 சனிக்கிழமை

மாலை 5-30 எஸ். எஸ். மணி பாகவதர் வாய்ப்பாட்டு.

6-10 அ. இ. ரே. வாத்தியக் கோஷ்டி.

6-20 மன்னார்குடி ஸ்ரீ சுவாமிநாத ஐயர் வாய்ப்பாட்டு.

இரவு 7-15 புர்ரா ஸ்ரீ சுப்ரமண்யம் தெலுங்கில் புதிய புஸ்தகங்களைப்பற்றி விமர்சனம் செய்வார்.

8-30 'பேயின் தீவு' என்ற நாடகத்தை அ. இ. ரே. நடிகர்கள் நடிப்பார்கள்.

9-15 வர்த்தமானமும், வானிலை அறிக்கையும்.

9-45 ஐரோப்பிய சங்கீதம்.

### 4-9-38 ஞாயிற்றுக்கிழமை

மாலை 5-30 ஸ்ரீமதி ஜி. சென்னம்மா வாய்ப்பாட்டு.

6-30 அ. இ. ரே. வாத்தியக் கோஷ்டி.

இரவு 7-15 'பானுமதி' என்ற தெலுங்கு நாடகம்.

7-30 மதுரை சகோதரர்கள் வாய்ப்பாட்டு.

9-15 வர்த்தமானமும் வானிலை அறிக்கையும்.

9-45 பாலையூர் ஸ்ரீ கே. வெங்கடராமய்யர் வாய்ப்பாட்டு.

### 5-9-38 திங்கட்கிழமை

மாலை 5-30 அ. இ. ரே. வித்வான் பதினோறு தந்தியில் பிடில் கச்சேரி.

6-10 திருக்கோகர்ணம் ஸ்ரீமதி டி. என். மாணிக்கம் வாய்ப்பாட்டு.

இரவு 7-15 'தமிழ் அகராதி தொகுத்த விதம்' என்ற விஷயம்பற்றி ராவ்சாகிப் எஸ். வையாபுரிப்பிள்ளை தமிழில் பேசுவார்.

7-30 திருக்கோகர்ணம் ஸ்ரீமதி டி. என். மாணிக்கம் வாய்ப்பாட்டு.

8-35 ஸ்ரீ கோபால்சாமி செட்டியார் வாய்ப்பாட்டு.

9-15 வர்த்தமானமும், வானிலை அறிக்கையும்.

9-30 'மூன்று கொடிகளின் கீழிருந்து வந்த மதராஸ்' என்பதுபற்றி சென்னை நகர் ஆர்ச் பிஷப் ஆங்கிலத்தில் பேசுவார்.

### 6-9-38 செவ்வாய்க்கிழமை

மாலை 5-30 திரு. கே.ஏ. ராதாகிருஷ்ண பிள்ளை (அழகநம்பியா பிள்ளை குமாரர்) வாய்ப்பாட்டு.

6-15 அ. இ. ரே. வாத்தியக் கோஷ்டி.

இரவு 7-15 'தெலுங்கில் நாவல் இலக்கியம்' என்பதுபற்றி திரு. வாவில்ல வெங்கடேஸ்வரலு தெலுங்கில் பேசுவார்.

7-30 மாயவரம் திருமதி டி. ஏ. சுந்தராம்பாள் வாய்ப்பாட்டு.

8-25 அ.இ.ரே. வித்வான் வீணை தர்பார்.

8-35 திருமதி டி. ஏ. சுந்தராம்பாள் வாய்ப்பாட்டு.

9-15 வர்த்தமானமும், வானிலை அறிக்கையும்.

9-30 'பழமொழிகள்' என்ற விஷயம்பற்றி ஹெச். ஸி. பேப் ஓர்த் ஆங்கிலத்தில் பேசுவார்.

### 7-9-38 புதன்கிழமை

மாலை 5-30 திரு சுப்ரமண்ய தீக்ஷதர் ஹார்மோனியம்.

6-15 திரு. ஆர். சுப்ரமண்யஐயர் (மதுரை மணிஐயர்) வாய்ப்பாட்டு.

இரவு 7-15 'பேசும் படத்தில் சம்பாஷணை' என்ற விஷயம்பற்றி திரு. வா. ராமசாமி தமிழில் பேசுவார்.

8-40 திருமதி கோதைநாயகி அம்மாள் வாய்ப்பாட்டு.

9-15 வர்த்தமானமும், வானிலை அறிக்கையும்.

9-30 'ரூய சுர்குக் கிழக்கே' என்ற விஷயம்பற்றி திரு. ஜி. பார்த்தசாரதி ஆங்கிலத்தில் பேசுவார்.

9-45 மாஸ்டர் ரங்கராஜன் வாய்ப்பாட்டு.

---



# தகுதியுள்ள கணவன்

(கோதைநாயகம்)

நாலாறு ஆண்டுகளுக்கு முன் பெண்ணுக்குக் கிராக்கியாயிருந்த செட்டிநாடு, இன்று பிள்ளைக்குக் கிராக்கி கொண்டு நிற்கிறது. எங்காயினும் ஒரு மாப்பிள்ளை கிடைத்தால் ஒன்றையுமே கவனியாது வாழ்க்கைப்படும் நிலைமையில் பெண்கள்பலர் தயாராகஇருக்கின்றார்கள். அப்படிப் பெண்கள் அதிகப்பட்டதினால்தான் தொங்கு குறைய லாயிற்று. என்றாலும் இன்னும் அடியோடு அந்த வழக்கம் நீங்காமை ஒரு சிறு காரணம் பற்றியேயாம்:- அதாவது கலியாணச் செலவும் சீர் சாமான்களின் அதிகரிப்புமே. அதுவும் சில ஒன்றிரண்டு வருடங்களில் குறைவுபட்டே தீரும். எனவே, அதை விடுத்து நாம் எடுத்துக் கொண்ட விஷயம் பற்றிப்பேசுவோம். "தகுதி உள்ள கணவன்" என்பதுபற்றி சமீபத்தில் மலாயாவிலுள்ள தலை நகரமொன்றில் ஸ்திரீகள் பள்ளிக்கூட ஆண்டுவிழாவில் ஒரு சீனப் பிரபலஸ்தர் நிகழ்த்திய சொற்பொழிவின் சாராம்சம் வருமாறு:—

கன்னிப் பருவ மெய்திய நீங்கள், மிகுந்த அறிவாளிகளாகவும், பட்டதாரிகளாகவும் இருப்பதனல் குடும்ப வியவகாரத்தில் தேர்ச்சியடைந்து விட முடியாது. குடும்ப வாழ்வின் காரியங்களைப் பொறுப்புடன் நடத்துவது எப்படி என்று இதுவரை நீங்கள் எந்தப் பாடத்திலும் படித்திருப்பீர்கள் என்று நான் எண்ணவில்லை. நான் சொல்லப்போகும் விஷயங்கள் உங்களுக்கு நன்கு பயன்தரக் கூடியதாகும்.

முதலில் குடும்ப வாழ்க்கை தோன்றுதற்கே கணவன்தான் முக்கியம். அவன் எப்படி இருக்கவேண்டும்? ஆள் இன்னான் என்று கூட நன்கு தெரிந்து கொள்ளாமல் திடீரென்று காதல் கொண்டுவிடுவது இளமங்கையின் இயல்பு. அது பெருந் தவறு. இப்பொழுது சீனத்து இளம் பெண்கள் இந்தக் காதல் விஷயத்தில் பெற்றோர்களின் அனுமதியின்றி, இஷ்டம்போல் பிரியப்பட்ட கணவனை மணக்க அனுமதிக்கப் பட்டிருக்கிறார்கள். அது ஒரு வகைக்கு நன்மையே; ஆனாலும் கெடுதல் தான் அதிகம் என்பது என் கருத்து. உதாரணமாக, ஒருவன் ரப்பர் தோட்டப் பால் வெட்டுக் கூலியாக இருந்து நடை உடை பாவனைகளில் சிறந்து விளங்குவதைக் கண்டு மையல் கொள்ளும் ஒரு படித்த பெண்ணுடைய வாழ்வு இனிமை தரப்போவதில்லை. அவள் நினைப்புகளெல்லாம் பகற் கனவாகவே முடியும். அதேபோல எல்லா வகையாலும் தனக்குத் தகுதி உள்ள மணாளன் வாய்க்காவிட்டால் கஷ்டப்பட்டே தீரவேண்டும்.

உங்களுக்குத் தேவையான ஒரு துணியில் கலர் பிடித்திருக்கின்றதா என்று பார்க்கின்றீர்கள். பூ பிடித்திருக்கின்றதா என்பதைக் கவனிக்கின்றீர்கள். இன்னும் எத்தனையோ வகைகளில் ஆராய்ந்து கவனித்துப் பிறகுதானே ஒரு ஜாக்கெட்டுக்கு வேண்டிய துணியை வாங்குகிறீர்கள். துணியில் மட்டுமல்ல. எந்தப் பொருளை நீங்கள் வாங்குவதாக இருந்தாலும் துருவித் துருவிப் பார்க்காமல் வாங்கப்போவதில்லை. கணவன் விஷயத்திலும் நீங்கள் இப்படிக் கவனித்தால் நன்மை உண்டாவது நிச்சயம்.

காதல் முதலிலே ஒரு மாதிரி இனிப்பாகத்தான் இருக்கும். அதை எக்காலும் இனிக்கச் செய்யவேண்டியவன் கணவன். ஆனால், பெரும்பாலான கணவன்மார்கள், வேறு புதிதாக ஒரு பெண்ணை நாடுவதோடல்லாது உங்களைத் துன்புறுத்தவும் செய்வார்கள். மென்மையான உங்கள் சரீரம் துடிதுடிக்க உதைப்பார்கள். முதலில் முத்தமிட்ட அழகிய ரோஜாக் கன்னங்கள் சிவக்கும்படியாக அறைவார்கள். கண் மூக்கு முதலிய அவயவங்களைக் கெடுக்கவும்கூடத் துணிவார்கள். இந்த மாதிரியான அறிவில்லாத முரட்டுக் கணவன்மார்களிடம் நீங்கள் அகப்பட்டுக்கொள்ளாமல் இருப்பதற்குத்தான் முதலிலேயே நன்கு ஆராய்ந்து காதலிக்க வேண்டும்.

முதலில் மயங்கி கவனக் குறைவாக ஒரு முரடன் அல்லது மூடன் கையில் அகப்பட்டுப் பின், தற்கொலையை நாடுவது ஏன்? தனக்குத் தகுதி உள்ளவன் தானா என்பதை ஆராய்ந்திருந்தால் வருந்த வேண்டியதில்லையே.

நீங்கள் காதலிக்கும் புருஷர்கள் எல்லோரும் பெரிய பணக்காரர்களாக அகப்பட்டு விடமாட்டார்கள். கூடுமானவரை போதிய வசதி, சம்பாத்தியம், அன்பு உள்ளவர்களாகவும், புத்திசாலியாகவும் இருந்தாலே போதும்.

உங்கள் மனம்போல நடக்கும் வாலிபன் கணவனுகக் கிடைத்து உங்கள் வாழ்க்கையைத் தூய்மை செய்ய வேண்டுமென்பதே எனது கோரிக்கை.

# ரயில் வண்டிகளின் போக்குவரத்து கால விபரம்

### திருச்சியிலிருந்து—மானுமதுரைக்கு

| ஸ்டேஷன்கள். | | 25 நி. பாஸ்ட் பாஸஞ்சர். | 1 நி. இன்டோ சிலோன் எக். | 67 நி. பாஸஞ்சர். | * 33 நி. பாஸஞ்சர். | * 29 நி. பாஸஞ்சர். | 31 நி. பாஸஞ்சர். | 7 நி. தனுஷ் பாஸ்ட் பாஸஞ் |
|---|---|---|---|---|---|---|---|---|
| திருச்சினப்பள்ளி ... | | 4-15 | 7-40 | 10-20 | | 13-20 | 17-25 | 21-50 |
| புதுக்கோட்டை | வரு | 5-18 | 8-52 | 11-51 | | 14-35 | 18-49 | 23-5 |
| | புற | 5-24 | 8-58 | 11-57 | | 14-42 | 18-55 | 23-11 |
| நமனசமுத்திரம் ... | | 5-35 | 9-9 | 12-7 | | 15-1 | 19-6 | - - |
| திருமயம் ... | | 5-49 | 9-24 | 12-20 | | 15-16 | 19-20 | 23-34 |
| செட்டிநாடு ... | | 6-3 | 9-40 | 12-33 | | 15-31 | 19-34 | 23-50 |
| கோட்டையூர் ... | | 6-13 | 9-50 | 12-42 | | 15-41 | 19-44 | 24-00 |
| காரைக்குடி | வரு | 6-22 | 10-5 | 12-55 | | 15-56 | 19-58 | 0-10 |
| | புற | 6-28 | 10-13 | | 14-25 | 16-17 | 20-22 | 0.18 |
| தேவகோட்டை ரஸ்தா | | 6-38 | 10-22 | | 14-33 | 16-26 | 20-30 | - - |
| கல்லல் ... | | 6-55 | 10-41 | | 14-50 | 16-45 | 20-48 | 0-52 |
| நடராஜபுரம் ... | | 7-7 | - - | | 15-2 | 16-59 | 21-00 | 1-6 |
| நாட்டரசன்கோட்டை | | 7-20 | 11-7 | | 15-24 | 17-14 | 21.12 | 1-21 |
| சிவகெங்கை ... | | 7-31 | 11-19 | | 15-35 | 17-26 | 21-23 | 1-33 |
| மானுமதுரை ... | | 8-8 | 11-48 | | 16-11 | 18-5 | 21-55 | 2-2 |

* இக்குறியிட்ட வண்டிகள் நேரே மதுரைக்குச் செல்லுவன.

### மானுமதுரையிலிருந்து—திருச்சிக்கு

| ஸ்டேஷன்கள். | | 32 நி. பாஸஞ்சர் | * 68 நி. பாஸஞ்சர் | 30 நி. பாஸஞ்சர். | 2 நி. இன்டோ சிலோன் எக். | 34 நி. பாஸஞ்சர். | 26 நி. பாஸ்ட் பாஸஞ்சர். | 8 நி. தனுஷ் பாஸ்ட் பாஸ. |
|---|---|---|---|---|---|---|---|---|
| மானுமதுரை ... | | | 8-34 | 12-20 | 14-40 | 16-43 | 18-40 | 23-25 |
| சிவகெங்கை ... | | | 9-8 | 12-56 | 15-11 | 17-27 | 19-14 | 23-57 |
| நாட்டரசன்கோட்டை | | | 9-19 | 13-7 | 15-23 | 17-38 | 19-25 | 0-9 |
| நடராஜபுரம் ... | | | 9-31 | 13-20 | - - | 17-50 | 19-37 | 0-23 |
| கல்லல் ... | | | 9-43 | 13-33 | 15-48 | 18-2 | 19-49 | 0-51 |
| தேவகோட்டை ரஸ்தா | | | 10-00 | 13-50 | 16-7 | 18-19 | 20-6 | - - |
| காரைக்குடி | வரு | | 10-11 | 13-57 | 16-15 | 18-30 | 20-13 | 1-15 |
| | புற | 6-55 | 10-21 | 14-7 | 16-25 | | 20-25 | 1-25 |
| கோட்டையூர் ... | | 7-5 | 10-31 | 14-18 | 16-36 | | 20-36 | 1-36 |
| செட்டிநாடு ... | | 7-14 | 10-40 | 14-28 | 16-47 | | 20-46 | 1-47 |
| திருமயம் ... | | 7-27 | 10-53 | 14-42 | 17-2 | | 21-00 | 2-3 |
| நமன சமுத்திரம் ... | | 7-40 | 11-6 | 14-59 | 17-17 | | 21-14 | - - |
| புதுக்கோட்டை | வரு | 7-49 | 11-15 | 15-8 | 17-27 | | 21-23 | 2-25 |
| | புற | 7-55 | 11-21 | 15-15 | 17-34 | | 21-31 | 2-31 |
| திருச்சினப்பள்ளி ... | | 9-31 | 12-40 | 16-50 | 18-55 | | 22-55 | 3-54 |

* இக்குறியிட்ட வண்டி மதுரையிலிருந்து நேரே வருவது.

## பஞ்சாங்கம்

| பர்மா. | இங். | தமிழ். | வாரம். | வெகுதான்யஹு-இங் 1938. பர்மா-1300. |
|---|---|---|---|---|
| 8 | 1 | 16 | வியா | சப்த்-18-32. அனு-55-37. சித்தயோகம். |
| 9 | 2 | 17 | வெள் | அஷ்ட-21-42. கேட்-60-0. மரணயோகம். |
| 10 | 3 | 18 | சனி | நவமி-25-49. கேட்-0-55. சித்தயோகம். |
| 11 | 4 | 19 | ஞாயி | தசமி-30-31. மூலம்-6-45. அமிர்த சித்தயோகம். |
| 12 | 5 | 20 | திங் | ஏகாத-35-31. பூராடப்-13-18. மரண யோகம். |
| 13 | 6 | 21 | செவ் | துவாத-40-24. உத்திரா-19-41. சித்தயோகம். |
| 14 | 7 | 22 | புதன் | திரயோ-44-43. திரு-25-38. சித்தயோகம். |
| 15 | 8 | 23 | வியா | சதுர்-48-15. அவி-30-52. சித்தயோகம். |

## நடப்பு வட்டி விகிதங்கள்

| மாதம். | நாள். | சென்னை | | | ரெங்கூன். | | | பினங்கு. | | | சிங்கப்பூர். | | | செய்கோன். | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| ஈஸ்வர புரட்டாசி | 30 | 0 | 5 | 6 | 0 | 4 | 0 | 0 | 4 | 0 | 0 | 4 | 0 | 0 | 4 | 0 |
| அற்பசி | 30 | 0 | 5 | 6 | 0 | 4 | 0 | 0 | 4 | 0 | 0 | 4 | 0 | 0 | 4 | 0 |
| கார்த்திகை | 29 | 0 | 6 | 0 | 0 | 4 | 0 | 0 | 4 | 0 | 0 | 4 | 0 | 0 | 4 | 0 |
| மார்கழி | 30 | 0 | 6 | 0 | 0 | 4 | 6 | 0 | 4 | 0 | 0 | 4 | 0 | 0 | 4 | 0 |
| தை | 29 | 0 | 6 | 0 | 0 | 4 | 9 | 0 | 4 | 0 | 0 | 4 | 0 | 0 | 4 | 0 |
| மாசி | 30 | 0 | 7 | 0 | 0 | 5 | 0 | 0 | 4 | 0 | 0 | 4 | 0 | 0 | 4 | 0 |
| பங்குனி | 30 | 0 | 7 | 3 | 0 | 5 | 0 | 0 | 4 | 0 | 0 | 4 | 0 | 0 | 4 | 0 |
| வெகுதானிய | | | | | | | | | | | | | | | | |
| சித்திரை | 31 | 0 | 7 | 3 | 0 | 4 | 6 | 0 | 4 | 6 | 0 | 4 | 0 | 0 | 4 | 0 |
| வைகாசி | 32 | 0 | 7 | 3 | 0 | 4 | 0 | 0 | 4 | 6 | 0 | 4 | 0 | 0 | 4 | 0 |
| ஆனி | 31 | 0 | 6 | 9 | 0 | 4 | 0 | 0 | 4 | 6 | 0 | 4 | 0 | 0 | 4 | 0 |
| ஆடி | 32 | 0 | 6 | 3 | 0 | 4 | 0 | 0 | 4 | 6 | 0 | 4 | 0 | 0 | 4 | 0 |
| ஆவணி | 31 | | | | | | | | | | | | | | | |

REG. NO. M. 3888 | 16 PAGES | PRICE ANNA 1

SUBSCRIPTIONS
Inland Annual ... Rs. 5
Burma Annual ... Rs. 6
Foreign Annual ... Rs. 7

# ஊழியன்



The "Oolian", A Nationalist Tamil Weekly

VOL. 18 | KARAIKUDI, 1ST SEPTEMBER 1938, THURSDAY | NO. 9

## சிரிப்பும் நொடிப்பும்

"காந்திஜி குடிசைமுன் 10 ஹரி ஜனங்கள் சத்யாக்ரகம்"

—தினசரிப் பத்திரிகை.

அந்தக் குடிசையில் குறைபடாத அளவு சத்தியமிருக்கிறது. தாராளமாய் கிரகிக்கலாம். ஆனால் சத்தியத்தை சத்தியத்தால்தான் கிரகிக்க முடியும்.

* * *

"ஹரிகதா காலட்சேபங்களில் கீர்த்தி பெற்ற மாங்குடி ஸ்ரீ சிதம்பர பாகவதர் காலமானார்."

—ஓர் செய்தி.

இங்கு காலட்சேபம் நடத்தமுடியாமல் பரலோகம் செல்லும் ஏழை மக்களுக்கு இனி காலட்சேபத்துக்குக் குறைவில்லை.

* * *

"சுவர் வைத்ததுபோல் நிற்பது பலாத்காரம்"

—மகாத்மா

அடாடா. ஒரு இடத்தை மறியல் செய் என்றால், அதனுள்ளே உள்ளவர்களையோ அல்லது அதற்குள் போகிறவர்களையோ மறித்து விடுவதென்றல்லவா நினைத்தோம். இப்போது மகாத்மா, மனிதர் என்றால் மனிதருடைய உடலையல்லாமல் உள்ளத்தை மட்டும் மறுத்து, மாற்றி வைக்க முயற்சிப்பதுதான் மறியல் என்றல்லவா சொல்லுகிறார். அகிம்சா மூர்த்திக்கு ஜே!

"காமன் பண்டிகை லாவணி மெட்டில் பாட்டு"

—ஹிந்தி எதிர்ப்புப் பத்திரிகை.

ஹிந்தி எதிர்ப்புக் காரர்களெல்லாம் எரிந்த கட்சிக்காரர்கள்தானே?

* * *

"அந்திக் கடையில் சந்தி சிரிக்கும் இந்தி"

—ஷை பாட்டில் முதல் அடி.

பிரதம மந்திரிகூட இவ்வளவு சீக்கிரத்தில் இவ்வளவு ஏராளமான மக்கள் ஹிந்தி கற்பார்களென்று எதிர்பார்த்திருக்கமாட்டாரே. கட்டாய ஹிந்திக்கு ஜே!

* * *

"இந்தி பிரேமி மண்டலுக்கு ரூ. 50"

—திருச்சி ஜி. போர்டு நன்கொடை.

திருச்சி தமிழர் படைக்குச் சொல்லாதீர்கள். வயிறெரியப்போகிறார்கள்.

* * *

"கோர ரயில் விபத்து. மாண்டவர்கள் கணக்கில்லை."

—ஒரு தலைப்பு.

ஏன் கணக்கில்லை? ரயில்வே ஏஜண்டின் 26-ம் தேதி அறிக்கைப்படி ரயில் விபத்தில் 24, ஆஸ்பத்திரியில் 9, ஆக மொத்தம் 33 பேர் மாண்டனர்.

"ரேடியோவுக்கு சர்க்கார் உதவுவதுபோல் சினிமாவுக்கும் உதவவேண்டும்"

—கோவையில் ஸ்ரீ ராம்குமார்.

கட்டாயம் உதவுவார்கள். அதற்குள்ளாக அய்யலூர் ரயில் விபத்து சேதத்துக்காக சினிமாக்காரர்கள் ஏதேனும் பண உதவி செய்வார்களென சர்க்கார் எதிர்பார்க்கலாமா?

* * *

"தினமணி" விற்ற பையனிடம் தையல்வேலை செய்யும் ஒருவன் ஒரு பத்திரிகையை வாங்கிக்கொண்டு, காசு கொடுக்காமல் தன் கையிலிருந்த கத்தரிக்கோலால் அடித்தானாம்.

—தர்மபுரிச் செய்தி.

அடித்தவன் தையல் வேலைக்காகத்தான் கத்தரிக்கோல் வைத்திருந்தான் என்பது நிச்சயந்தானா?

* * *

மகாராஷ்ட்ரத்திலுள்ள காங்கிக் குல்லாய்க் கமிட்டி, குல்லாய் ஒன்று மூன்றணாவுக்குமேல் இருக்கக்கூடாதென்று தீர்மானித்துள்ளது.

—ஒரு வடநாட்டுச் செய்தி.

எப்படியாவது மகாராஷ்ட்ரத்திலுள்ள எல்லோருக்கும் இப்படிக் குல்லாய் போட்டுவிட வேண்டுமென்பதுதான் இவர்களுடைய நோக்கம் என்பதில் தடையேயில்லை.

* * *

"சதிலீலாவதி"யில் ஸ்ரீ ராதா ஒரு வாய்க்காலளவு கண்ணீர் பெருக்கினார். பதிபக்தியில் ஸ்ரீ கேசவன் தம் கண்களிலிருந்து ஒரு 'நயாக்ரா' நீர் வீழ்ச்சியை வெளியனுப்பினார்."

—சினிமாப் பத்திரிகை.

இதை வாசிக்கும் பெண்கள் பழைய நினைவு வந்து, "ஐயோ பாவம்" என்று ஆறாய்க் கண்ணீர் வடித்தாலும் வடிக்கலாம்.

* * *

லண்டனிலுள்ள பல பிரபல இந்திய முஸ்லீம்கள் கீழக்கோடி மண்டபத்தில் பிரார்த்தனையை முடித்துக் கொண்டு, பேராசிரியர் எச். ஜி. வெல்ஸ் எழுதிய "உலகச் சரித்திரச் சுருக்கம்" என்ற புத்தகத்திலுள்ள ஒரு பாகத்தைக்கண்டித்து, அதில் ஒரு புத்தகத்தையும் கொளுத்தினார்கள்.

லண்டன் விமானச் செய்தி

லண்டன் நகரம் பர்மாவில் இல்லாமற் போனதும், பேராசிரியர் வெல்ஸ் பர்மாவிலுள்ள பௌத்தமதத்தைச் சாராததும் நமது பாக்கியமேயல்லவா?

* * *

"கொட்டக் கொட்ட நிரம்பாத ஜாடி?"

—ஓர் தலைப்பு.

ஓட்டையோ என்னவோ!



Edited, Printed and Published by Raya Chockalingan for The India Publications Ltd., at the Oolian Power Press, Karaikudi.

